



தமிழ்மாதம் முதல்நாள்தோறும் வெளிவருகிறது

அருள் 7 ] பிரமாதிச வைகாசி (14-5-73) [கருணை 8


## விநாயகர் காப்பு

திருவுங் கல்வியுஞ் சீரும் சிறப்பும் உன்
திருவடிப் புகழ் பாடுந்திறமும் நல்
உருவுஞ் சீலமும் ஊக்கமும் தாழ்வுறு
உணர்வும் தந்து எனது ள்ளத்தமர்ந்தவா
குருவும் தெய்வமுமாகி அன்பானர் தங்
குறை தவிர்க்குங் குணப் பெருங் குன்றமே
வெருவுஞ் சிந்தை விலகக் கஜானனம்
விளங்குஞ் சித்தி விநாயகவள்ளலே

— திருவருட் பிரகாச வள்ளலார்


| ஆண்டுச் சந்தா | ஆயுள் சந்தா | தனிப் பிரதி |
|---|---|---|
| ரூ. 6-00 | ரூ. 100 | 50 காசு |

சந்தா அனுப்பவேண்டிய முகவரி :
நிர்வாகி, "அருள்," 231, ஆழ்வார்திருநகர், 8-வது கிராஸ்
சென்னை - 600087

# அட்டைப் பட
# விளக்கம்

கோயமுத்தூருக்கு அருகில் மூன்றுமைல் தொலைவில் பேரூர் என்ற புண்ணிய ஸ்தலம் இருக்கிறது. இங்கு ஸ்ரீ பஞ்சமுக ராஜகணபதி ஆலயம் இருக்கிறது. இந்த மூர்த்தி பஞ்சமுகங்களுடன் சித்தி புத்தி சமேதர ராஜ கணபதியாக சிங்கமுக வாகனத்தில் வீற்றிருக்கிறார். இம் மூர்த்தியைப் போல் இந்தியாவில் வேறு எங்கும் இருப்பதாகத் தெரிய வில்லை.

கும்பாபிஷேகம் நடந்து 10 ஆண்டுகளுக்கு மேல் ஆகிவிட்டது. இந்த மூர்த்தி சிருங்கேரி ஜகத்குரு ஸ்ரீ சங்க ராச்சார்ய ஸ்வாமிகளால் பிரதிஷ்டை செய்யப்பட்டது. இங்கு ஆறுகால பூஜை நடக்கிறது. வேதபாடசாலை, காலையிலும் மாலையிலும் நடக்கிறது. ஒவ்வொரு விநாயக சதுர்த்திக்கும் 9 நாட்கள் மிகவும் விமரிசையாக லெட்சார்ச் சனையுடன் கூடிய வழிபாடுகளும் திருஉலாவும் நடந்து வருகிறது. மாத இரு சதுர்த்திகளுக்கும் கணபதி ஹோமங் கள் நடந்து வருகின்றன.

கோவையைச் சேர்ந்த இளைஞர் திரு K- R. முருகானந்த் அவர்கள் உதவியினால் கோயிலுக்கு அருகில் ஸ்ரீ ராஜ கணபதி ஸ்டோர் என்ற கடை வைத்து அதில் வருகின்ற இலாபங்களைக் கொண்டு வேதபாடசாலை நடத்தப்படு கிறது. வேத பாடசாலையில் 30 பேர் படிக்கிறார்கள். தினசரி காலை 4 மணி முதல் 6 மணி வரை தெய்விக இசைத்தட்டுக்களின் சாஸ்திரிய சங்கீதம் ஒலிபரப்பப்படு கின்றன.



● கன்னியா குமரியில் பரத கண்டத்தின் கிழக்கு, தெற்கு, மேற்காகிய மூன்று புறங்களிலும் உள்ள கடல்களும் ஒருங்கு கூடுவதால் இவ்விடம் கடலில் குளிப்பதற்குச் சிறந்த இடமாகும்.

● பக்தர்கள் செய்ய முன்வரும் கைங்கர்யங்கள் எவ்வளவு சிறிதாயினும் அதை ஏற்று, பூர்த்தி செய்து வைப்பதில் கோயில் அதிகாரிகள் முழு மனத்துடன் ஒத்துழைக்க வேண்டும். சில பெரிய தேவஸ்தானங்களில் இத்தகைய ஒத்துழைப்பு கிடைப்பது இல்லை.

● காஞ்சி காமாட்சி ஆலயத்தில் காமாட்சி தேவியின் முதல் பிரகாரத்தில் காயத்ரி மண்டபத்திற்குள் செல்லும் வழியிலுள்ளது. இது தென் கிழக்கு நோக்கி உள்ளது. காமாட்சி அசுரர்களை அழிப்பதற்காகத் தானே அன்ன பூரணியாக அவதாரம் செய்தாள்.

● பிறருக்குத் தீங்கு செய்யாமல் மட்டும் இருந்தால் போதாது. நன்மையும் செய்ய வேண்டும். வேம்பு, எட்டி, வேல் முதலிய மரங்களும் மருந்துக்கும் விறகுக்கும் பயன்படுகிறது.

● பால், தயிர், மோர், நெய் இவைகள் தெரு வழியாக அலைந்து நம் வீடு தேடி வருகின்றன அதனால் பால், நெய் முதலியவைகளின் பெருமை குறையாது. கள் இருக்குமிடத்திலிருந்தே விலையாகிறது. அதனைத் தேடிப் பலர் செல்லுகிறார்கள். அதனால் கள்ளுக்குப் பெருமை என்று நினைக்கக் கூடாது.

● எல்லா வேதப் பகுதிகளுக்கும் தனித்தனியே உபநிடதங்கள் உண்டு. இருப்பினும் 108 உபநிடதங்களே இன்று கிடைப்பன. அவைகளுள் மிகவும் போற்றப் படுபவை 10 ஆகும். இதை தசோபநிடதங்கள் என்பார்கள்.

● பக்தர்கள் கோயிலை அசுத்தம் செய்யக் கூடாது. அர்ச்சகப் பெரியோர்களிடமும், மற்ற ஆலய சிப்பந்திகளிடமும் பரிவும் மரியாதையும் ஆதரவும் காட்டி நடந்து கொள்ள வேண்டும். பக்தி சிந்தனையோடு ஸந்நிதியில் ஸேவிக்க வர வேண்டும். மனத் தூய்மையை வளர்க்கவே ஆலயம் அமைந்திருக்கிறது என்பதை உணர வேண்டும்.

● இறைவன் தன் படைப்புக்களின் மூலம் தன்னை வெளிப் படுத்திக் கொள்கிறான். மனச் சான்று என்னும் குரலின் மூலம் தன் கட்டளைகளை வெளிப்படுத்திக் கொள்கிறான்.

● அனுபவிக்கக்கூடிய இளமைப் பருவத்தில் வறுமை ஒரு துன்பம் அனுபவிக்க இயலாத முதுமைப் பருவத்தில் செல்வம் ஒரு பெருந் துன்பம்.

● தமிழர்களுக்குப் பிள்ளையார் சுழி போட்டு எழுதுவதில் விருப்

பம் உண்டு. ஏட்டில் எழுத்தாணி எழுதுகிறதா என்று பார்ப்பதற்கும், காகிதத்தில் பேனா எழுதுமா என்று சோதிப்பதற்கும் பிள்ளையார் சுழி போட்டுப் பார்க்கும் பழக்கம் இன்றும் தமிழர்கள் இடையே அதிகம் காணப்படுகிறது.

● சிவனடியார்களுக்கு அமுது ஊட்டுவதற்காகத் திருவீழிமிழலையில் சிவபெருமான் நாள்தோறும் அருளிய பொற்காசுகளைப் பெற்று பஞ்சம் தீரும் வரைப் பலரது பசியைத் தீர்த்தருளினார் அப்பர் சுவாமிகள்.

● மதுரைக்குக் கிழக்கே 12 மைல் தொலைவிலுள்ள திருமாலிருஞ்சோலையில் மரங்களும் சோலைகளும் அழகு செய்யும் அமைதியான மலைச்சாரலில் கோயில் கொண்டுள்ளார் அழகர். இங்கு உள்ள உற்சவமூர்த்தியே அழகர் மலை அழகனான சுந்தரராஜன்.

● சைவர்களுக்கு விபூதி, உருத்திராக்கம், செந்தூரம் முதலியனவும், வைணவர்களுக்கு திருநாமம், துளசிமணி முதலியனவும் சமயச் சின்னங்களாம்.

● செந்தூரம் மஞ்சளால் உண்டாக்கப் படுகிறது. மஞ்சளுக்கு பல குற்றங்களை அகற்றும் சக்தி உண்டு. எனவே அது சக்தியின் அருளாகத் தரிக்கப்படுகிறது.

● தெய்வ வழிபாட்டிலும்' கலாசாரத்திலும், பழங்காலந் தொட்டே பெருமை வாய்ந்த நாடு இந்தியப் பெரு நாடு எவ்வளவோ மதங்கள் இந்தியாவுக்கு வந்த போதிலும் அவற்றால் எல்லாம் சிதைக்க முடியாமல் தழைத்தோங்கி இருந்து வருகிறது இந்து மதம். பிரசாரம் இல்லாமலே நிலைத்து நிற்கும் சிறப்பு நமது இந்து மதத்திற்கு உண்டு.

● கொழுந்து வேப்பிலையைப் பறித்து, அரைத்து நெல்லிக்காய் அளவு அதிகாலையில் வெறும் வயிற்றில் சாப்பிடுவது நல்லது. தொடர்ந்து சாப்பிட்டு வந்தால் வயிற்றுப் பூச்சிகள் மறையும்.

● மனித இனம் இறைவனை அடைவதற்குரிய நல்ல வழிகளைக் காட்டுவது எதுவோ அது சமயம். வேதாந்த நெறியில் அறிவுத் துறையில் வகுக்கப் பட்டதைச் சித்தாந்தம் என்றும், வழிபடும் கடவுள் பெயரால் அமைக்கப்பட்டதை சமயம் எனவும் பிரித்துக் கூறலாம்.

● ஆழ்வார்களால் மங்களா சாஸனம் செய்யப்பட்ட திருமால் திருப்பதிகளைத் திவ்விய தேசங்கள் என்றும் உகந்தருளின நிலங்கள் எனவும் அழைப்பார்கள். 108 திவ்விய தேசங்கள் இருக்கின்றன

● முட்டாள்களையும் பொய்யர்களையும் தெய்வங்கள் என்று கூறுவதை விட இறைவனின் உறைவிடத்தைக் காலியாக வைத்து இருப்பது நல்லது.

● மலச்சிக்கல் இருந்தால் எழுந்தவுடன் பல் துலக்கி, தண்ணீர் அல்லது வெந்நீர் ஒரு டம்ளர் சாப்பிட்டு சிறிது தூரம் நடந்து சென்றால் மல நிவர்த்தி யாகும்.

● நல்ல எண்ணம் கொண்டால் வாழ்வோம். தீய எண்ணம் கொண்டால் அழிவோம். நல்ல எண்ணத்தால் பாண்டவர்கள் வாழ்ந்தார்கள். தீய எண்ணத் தால் துரியோதனுதியர் அழிந் தார்கள்.

● எந்தப் பொருளைப் பற்றியும் தொடர்ந்து விளம்பரம் செய்வ தால் உற்பத்தி செய்யும் நிறுவ னமோ, அல்லது பொருளோ புகழ் பெறுகிறது. மக்களின் நினைவில் நிலைத்து நிற்கிறது.

● விநாயகர் ஒரு கொம்பு, இரு செவிகள், மூன்று திருக் கண்கள், நான்கு திருத் தோள்கள், ஐந்து திருக் கரங்கள், ஆறெழுத்துக்கள் உடையவர். அவரை வழிபட் டோர் ஏழு பிறவிகளும் நீங்கி, எண் திசைகளும் புகழ, ஒன்பது மணிகளும் பெற்று சம்பத்துடன் வாழ்வார்கள்.

● விநாயகர் எப்போதும் பிரம்மச்சாரியாக விளங்குபவர். தம்மை வழிபடுவார்க்கு காரிய சித்தியும், அதற்குரிய புத்தியும் அருள்பவர் ஆதலின் சித்தி, புத்தி என்ற பண்புகளையும் இரு மனைவி யராக உடையவர் சித்தி புத்தி விநாயகர்.

● சிந்திக்காமல் படிப்பது மனத் தில் குழப்பத்தைத் தோற்றுவிக் கும். படிக்காமல் சிந்திப்பது மனத் தின் சமநிலையைக் கெடுத்துவிடும்.

● வாயில் விஷம் நிறைந்த பாம்பை மகுடி ஊதத் தெரிந் தவன் ஆட்டி மகிழ்கிறன். அது தெரியாதவன் பயந்து ஓடுகிறன்.

● பணம் மனிதனுக்கு இன்பத் தைக் கொடுத்ததுமில்லை, இனி மேல் கொடுக்கப் போவதுமில்லை. பணத்திற்கும் இன்பத்திற்கும் தொடர்பே கிடையாது. பணம் அதிகரிக்க அதிகரிக்க இன்னும் வேண்டும் என்ற ஆசை அதிகரித் துக் கொண்டே போகும்.

● அறிவாளிக்கும் புத்திசாலிக் கும் சிறிது வேறுபாடு உண்டு. சகலமும் தெரிந்தவன் அறிவாளி. எல்லாரையும் தெரிந்தவன் புத்திசாலி.

● தூதுளைக் கீரையை நெய் விட்டு வதக்கி, உப்பு புளி கூட்டித் துவையலாகச் செய்து சாப்பிட மூல ரோகங்கள் போகும். உடல் உறுதி பெறும். வாயு உபத்திரவம் நீங்கும். வாத கபங்களையும் போக்கும். குறிப்பாக இச்சை யைப் போக்கும்.

● ஏழை எளிய மக்களுக்கு வலிவு மிக்க உணவாகப் பயன் படுவது கீரையேயாகும். அதிக விலையுள்ள காய் கனிகளில் என்னென்ன உயிர்ச் சத்துக்கள் உண்டோ அவ்வளவும் இந்தக்

கீரைகளில் கிடைக்கும். இதனால் இது ஏழைகளின் நண்பன் என்றும் பாதுகாப்பு உணவுகள் என்றும் சிறப்பு பெயர் பெறுகின்றன.

● மிகைபட உண்போனுக்கு யோகமில்லை. முற்றிலும் உபவாசம் இருப்பதினாலும் பயன் இல்லை. ஒழுங்குக்கு உட்பட்ட உணவு வேண்டும் என்று பகவத் கீதை கூறுகிறது.

● பாலிலிருந்து தயாரிக்கப் படுகின்ற மோர், வெண்ணெய் நெய் உடலுக்கு உரத்தைக் கொடுப்பதில் சிறந்தனவாக உள்ளன. உடலுக்குத் தேவையான வைட்டமின்கள் எல்லாம் பாலில் உள்ளன.

● காய் கறிகள், கிழங்குகள், கீரைகள் ஆகியவற்றை அதிகமாக நீரில் சமுவாமலும், அரிந்து நெடு நேரம் காற்றேட விடாமலும், அதிக நேரம் வேக வைக்காமலும், வேகவைத்து நீரை வடிக்காமலும் சமைக்க வேண்டியது அவசியம் ஆகும்.

● பச்சை வாழைப்பழத்தை சாப்பிட்டு வந்தால் பித்த சம்பந்தமான நோய்கள் குணமாகும். மலச்சிக்கலைப் போக்கும். தேக சூட்டைத் தணித்து சமனப் படுத்தும்.

● சிவ பெருமானது மூன்று திருக்கண்களிலிருந்தும் பொழிந்த நீரில் தோன்றியதாக எண்ணிச் சிவனடியார்கள் அணிந்து கொள்ளும் மணிக்கு உருத்திராக்ஷம் என்று பெயர்.

● தினசரி குளிப்பதால் சரீரம் சுத்தம் அடைவது மட்டுமின்றி சரீரத்திற்கு ஆரோக்யமும் உண்டாகிறது. உற்சாகம் அதிகமாகிறது. மனம் பரிசுத்தமாவதற்கும், ஒருமைப்படுவதற்கும், இந்திரிய அடக்கத்திற்கும் உதவுகிறது. பல நோய்கள் நீங்குகின்றன. பசி உண்டாகிறது.

● சீர்காழித் திருத்தலத்தில் தமது மூன்ருவது வயதில் சிவ பெருமான் கட்டளைப்படி உமா தேவியார் தந்த ஞானப்பாலை உண்டு சிவஞானம் பெற்று திருஞானசம்பந்தராகி தேவாரப் பதிகம் பாடி அருளினுர்.

● அழகிய முகம் அடுத்தவரை வசீகரிக்கலாம். இனிமையான பேச்சு மற்றவரை அடிமைப்படுத்தலாம். ஆனுல் அன்பு ஒன்றுதான் வாழ்க்கையில் ஊன்று கோலாக இருந்து வழி காட்டும்.

● நேர்மையை அறிந்தவன் உயர்ந்தவன். நேர்மையைவிரும்புகிறவன் அதைவிட உயர்ந்தவன். நேர்மையைக் கடைப்பிடித்து அதில் மகிழ்ச்சி காண்பவன் தலை சிறந்தவன்.

● நாம் சாப்பிடும் தண்ணீரில் துளசி இலைகளைப் போட்டு வைத்திருந்து குடிக்க வேண்டும். தினசரி துளசி சேர்ந்த தண்ணீர் சாப்பிட்டு வந்தால் உடலுக்கு நல்ல பலம் ஏற்படும். உடலில் புதிய சுறு சுறுப்பும் தெம்பும் ஏற்படும்.

● அறிவு என்பது ஆற்றைப் போன்றது. அது எவ்வளவுக்கெவ்வளவு ஆழமாய் இருக்கிறதோ அவ்வளவுக்கவ்வளவு சந்தடி இன்றி அமைதியாய் இருக்கும்.

● பொன்னாங் கண்ணிக் கீரையை நாம் உணவில் கூடுமான வரை நிறையச் சேர்த்துக் கொள்ள வேண்டும். இந்தக் கீரையைச் சாப்பிடுவதால் கண் சம்பந்தமான சகல வியாதிகளையும் குணப்படுத்தும். உடல் உஷ்ணம் தணிந்து சமநிலையில் வைத்திருக்கும்.

● நாம் எல்லாரும் நம் சக்திக்கு உட்பட்ட விதத்தில் தினசரி, ஏதாவது மெல்லிய உடற்பயிற்சி செய்ய வேண்டும். திடீரென்று தீவிரமாக ஒரு நாள் கடுமையான பயிற்சி செய்வது பயனளிக்காது. அது ஆபத்தானது.

● பணம் சம்பாதிப்பது என்பது இந்தக் காலத்தில் மிகவும் கஷ்டமானது. சுலபமாக இருந்தால் இன்று ஏராளமான லட்சாதிபதிகள் நம் நாட்டில் இருப்பார்களே. பணம் சம்பாதிப்பதற்கு புத்தி சாலித்தனம், திறமை, ஊக்கம், விடாமுயற்சி, சக்தி இவை மிகவும் அவசியத் தேவைகளாகும்.

● ஆன்மார்த்த பூஜை அல்லது தான் மாத்திரம் உய்வதற்காகச் செய்யும் பூஜை எனவும், பரார்த்த பூஜை அல்லது பிறர் உய்வதற்குச் செய்யும் பூஜை என இருவகைப்படும்.

● வேதாந்தத்தின் கருத்தை விசேஷமாக விளக்கியிருப்பவர் சைவத் திருமுறைகளுள் ஒன்றான திருமந்திரத்தைப்பாடிய திருமூல நாயனார். இந்தத் திருமூலர் கூடு விட்டுக் கூடு பாய்ந்த சித்தர். பதினெண் சித்தர்களிலும் ஒருவர் அறுபத்து மூவர்களில் ஒருவர். இவரைத் தவிர இதர நாயன்மார்களுக்குச் சித்தர் கணக்கில் இடமில்லை.

● யானை முகம், ஒடிந்த கொம்பு, பருத்த தொந்தி, இடது கையில் மோதகம், மூஷிக வாஹனம் இவற்றுடன் இருந்த கோலத்தோடு விளங்குவதே விநாயகர் திருவுருவத்தின் அமைப்பாகும்.

● வாய்மை, கொல்லாமை, களவு செய்யாமை, கள் குடியாமை, விபசாரம் செய்யாமை, இனியவை கூறல், செய்நன்றியறிதல், புறங்கூறாமை முதலிய நல்ல ஒழுக்கங்களை நாம் கடைப்பிடிக்க வேண்டும். இதனால் நாம் எப்போதும் மன நிம்மதியுடனும், உற்சாகத்துடனும், ஆரோக்கியத்துடனும் திகழ முடியும்.

● நாமம் ஒரு வகைத் திருமண்ணால் இடப்படுவது. எல்லாம் முடிவில் மண்ணாய் விடும் என்பதை இது உணர்த்துகிறது. இறைவனது திருவடியல்லாது உயிர்களுக்கு வேறு கதியில்லை என்பதை உணர்த்த திருமாலின் திருவடியின் சாயலாய் திருமால் அடியார்கள் நாமம் இடுகின்றார்கள்.

# திருக்குறள்



ஸ்ரீ திருமுருக
**கிருபானந்தவாரியார்**
சுவாமிகள்

திருக்குறள் பொய்யில் புலவராகிய திருவள்ளுவர் பாடியருளியது; 1330 பாடல்களையுடையது; சிந்தைக்கு இனியது; செவிக்கு இனியது. வந்த வினைக்கு மருந்தாக இருந்து உதவுவது. அறம் பொருள் இன்பம் எனும் முப்பாலையுடையது.

சுருங்கச் சொல்லல், விளங்க வைத்தல் என்ற அழகுகளையுடையது திருக்குறள். மிக விரிந்த கருத்துக்களை மிகச் சுருங்கிய சில சொற்களால் கூறும் திறமுடையது திருக்குறள்.

'ஒரு முறைக்கு பத்து முறை கூறு' என்று ஆன்றோர்கள் கூறுவார்கள். திருக்குறளும் ஒவ்வொரு பொருளைப் பற்றிப் பத்துப் பத்துப் பாடல்களாகக் கூறுகின்றது, கோயில்களில் பெருவிழாவும் கொடியேற்றி பத்து நாள் கொண்டாடுகின்றார்கள். திருமாலும் உலகம் உய்யுமாறு பத்து முறை அவதாரஞ் செய்தார்.

இனி தமிழ் எழுத்துக்களில் முதல் எழுத்து 'அ'; இறுதி எழுது 'ன்'. திருக்குறளில் முதற் குறள் அகரத்திலேயே தொடங்குகின்றது;

அகர முதல எழுத்தெல்லாம் ஆதி
பகவன் முதற்றே உலகு.

இறுதிக் குறள் 'ன்' என்ற எழுத்தில் முடிவு பெறுகின்றது.

ஊடுதல் காமத்திற் கின்பம்; அதற்கின்பம்
கூடி முயங்கப் பெறின்.

இதனால் தமிழ் எழுத்துக்களில் முதலில் தொடங்கி, முடிவில் முடிகின்ற நூல், இந்த நூல் ஒன்றுதான்.

தன்னிலையில் அனுத்துணையும் சிதையாததும் பாடபேதம் இல்லாததும் ஆகிய நூல் இது. இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன் தமிழகம் செய்த தவப் பயனாய் எழுந்த அரிய நீதிநூல் இது. இதில் அடங்காத நீதி ஒன்றுமில்லை.

கணவனும் மனைவியும் கூடி வாழ்வது எதன் பொருட்டு? என்ற வினாவை எழுப்பிக் கொண்டு அந்த வினாவுக்கு அரு மையாக விடை கூறுகின்றது திருக்குறள்.

நாயகனும் நாயகியும் வீட்டில் இருந்து செல்வத்தை ஓம்பி வாழ் கின்ற காரணம், விருந்தினரை ஓம்பி உதவி செய்யும் பொருட்டே என்று கூறுகின்றது திருக்குறள்.

இருந்தோம்பி இல்வாழ்வ
தெல்லாம் விருந்தோம்பி
வேளாண்மை செய்தற்
பொருட்டு.

விருந்தோம்புவதே மேலான கடமை:

விருந்து புறத்ததாத் தா
னுண்டல் சாவா
மருந்தெனினும் வேண்டற்
பாற் றன்று.

இனி அரிய திருக்குறள் ஒன்றைச் சிந்திப்பாம்:

செல்விருந் தோம்பி வரு
விருந்து பார்த்திருப்பான்
நல்விருந்து வானத் தவர்க்கு.

பரிமேலழகர் இதற்கு "தன்கட் சென்ற விருந்தைப் பேணிப் பின் செல்லக் கடவ விருந்தைப் பார்த் துத் தான் அதனோடு உண்ண விருப்பான்" என்று உரை எழுதி யிருக்கின்றான்.

செல்விருந்து என்றதற்கு "தன்னை நாடிச் சென்ற விருந்து" என அது பொருள் தருகின்றது.

இதனினும் மேலான பொருள் ஒன்றை இங்கு கூறுகின்றேன்:

நமது நாட்டில் இருந்த சில ஞானிகள் ஆகார விஷயத்தில் அஜகரம் என்ற விருத்தியை மேற் கொண்டவர்கள். அஜகரவிருத்தி என்றால் மலைப்பாம்பு போன்ற உணவு என்று பொருள். மலைப் பாம்பு உணவை நாடி எங்குஞ் செல்லுவதில்லை. அது இருக்கு மிடத்திற்கு யதேச்சையாக ஒரு பிராணி வருமானால், அதனைப் பிடித்து அருந்தும்.

அதுபோல, அந்த ஞானிகள் எங்கும் உணவை நாடித் தேடிச் செல்லமாட்டார்கள். அவர்கள் தன்னிச்சைபோல் சென்று கொண்டிருப்பார்கள்; அவர்க ளைத் தேடிக்கொண்டு போய் உணவு தரவேண்டும். இந்த வகை யில் சேர்ந்தவர் பட்டினத்து சுவா மிகள்.

இருக்குமிடந் தேடி என்
பசிக்கே யன்னம்
உருக்கமுடன் கொண்டு வந்
தால் உண்பேன் — பெருக்க
அழைத்தாலும் போகேன்
அரனேஎன் தேகம்
இளைத்தாலும் போகேன்
இனி,

என்று கூறுவதிலிருந்து அவர் அஜகர விருத்தியை மேற்கொண்டவர் என்பது தெளிவாகின்றது.

எனவே செல்விருந்து என்றால், வீடு தேடி வராது தன் விருப்பம் போல் செல்லுகின்ற சிவ ஞானிகளைத் தேடி உணவு தந்து ஓம்புதல் வேண்டும் என்று பொருள் கொள்ள வேண்டும்.

இவ்வாறு செல்விருந்தை ஓம்பியும், வருவிருந்தை எதிர் பார்த்து ஆதரித்தும் உதவுகின்ற தரும குணசிலனை, தேவர்கள் தமக்கு நல்விருந்து என எதிர்பார்த்து உபசரித்துச் சிறப்புச் செய்வார்கள் என்று பொதுமறை கூறுகிறது.

இவ்வாறு அரிய பெரிய கருத்துக்களை விளக்கி நமக்கு நலஞ் செய்கின்ற அமுதத் தமிழ், திருக்குறள்.

இதனைப் படிக்கக் கூடாது. படிப்பது என்பது அழகும் அருமையும் இன்றிப் படிப்பது ஆகும்.

ஒருவது என்பது காதலாகிக் கசிந்து கண்ணீர் மல்கி ஓதுவதாகும்.

எனவே திருக்குறளை ஓதுதல் வேண்டும். திருக்குறள் உண்மை மொழியாகும். அருணகிரிநாதர்,

"திருவள்ளுவ தேவர்
வாய்மை என்கிற
பழமொழியை ஓதியே
உணர்ந்து"

என்கின்றார்.

ஆகவே, வானோரும் போற்றும் திருக்குறளை, ஏனோரும் ஓதி உணர்ந்து நலத்தைப் பெற்று உய்வார்களாக.



● அர்த்த மண்டபம், மஹாமண்டபம், ஸ்நபந மண்டபம் அலங்கார மண்டபம், சபாமண்டபம் என்னும் மண்டபங்கள் நிவிருத்தி, பிரதிஷ்டை, வித்தியை, சாந்தி, சாந்தியாதீதம் என்னும் கலைகளை உணர்த்துகின்றன.

● ஆறுமுகங்கள், பன்னிரண்டு கரங்கள் அழகிய வடிவேல் இவற்றைக் கொண்டு, வள்ளிதெய்வானை என இருசக்திகள் சமேதரராக விளங்குவதே முருகனது உருவத் தோற்ற அமைப்பாகும்.

● தினசரி உணவிற்குப் பின் இரவில் நெல்லி அல்லது திரிபலா பொடியை தேனில் குழைத்து அல்லது நீரில் கலக்கி அருந்தினால் சாப்பிட்ட உணவு நன்கு சீரணம் ஆகும்.

● நாக்கை திருப்தி செய்வதற்காக அல்லது உடலைப் பாதுகாக்கவுள்ள கடமை என்று கொண்டு, மருந்தைப் போல உணவைக் கொள்ள வேண்டும். ஆனால் துரதிர்ஷ்டவசமாக கோடிக் கணக்கான மக்கள் சுவைக்காகவே உணவு உட்கொள்கிறார்கள் என்று மகாத்மா காந்தி அவர்கள் ஓர் இடத்தில் குறிப்பிட்டார்கள்.

● ஸ்ட்ராங் காபி, அல்லது தேநீரைப் பருகாதீர். தினசரி ஆறு முதல் எட்டு தம்ளர் தண்ணீர் சாப்பிட வேண்டும். அப்போது மலச்சிக்கல் ஏற்படாது.

● உண்மையான பெரிய மனிதர்கள், வியாபார சம்பந்தமான புத்தகங்களைப் படிப்பதன் மூலம் எவ்வளவோ புதிய நுணுக்கமான விஷயங்களைத் தெரிந்து கொள்வார்கள். சாதாரணமானவர்கள் படிப்பதற்கு நேரமில்லை என்று சொல்லி அதில் சிரத்தையும் கொள்ள மாட்டார்கள்.

● முற்றிய வாழைக்காய், உருளை, சேப்பங்கிழங்கு, மஞ்சள் பூசணி முதலியன உடலுக்கு உபாதையை உண்டாக்கும்.

● கீரைகளை துவரம் பருப்புடன் சேர்த்துக் கடைந்து நெய்யுடன் சேர்த்துச் சாப்பிட்டால் நல்ல ருசியாக இருக்கும். வெங்காயம் பச்சை மிளகாய், உப்பிட்டுக் கடைந்து முறைப்படி தாளித்து நெய்யன்னத்துடன் சாப்பிடலாம் மசியலாகவும், துவட்டலாகவும் உண்ணுவதே நல்லது.

● மற்ற மதங்களெல்லாம் தோன்றிய காலம் கணக்கு உண்டு. நம் இந்துமதம் தோன்றிய காலம் கணக்கு கிடையாது. உலகம் தோன்றிய காலத்திலிருந்து இந்துமதம் இருக்கிறது.

● கடவுள் இல்லை என்பவனுக்கு எல்லாம் இல்லாமலேயே போய் விடும். கடவுள் உண்டு என்பவனுக்கு எல்லாப் பொருள்களும் உண்டாகும்.

● எம்மாதிரியான வியாபாரத்தை ஆரம்பிக்க வேண்டுமானாலும் மூலதனம் இவ்வளவுதான் வேண்டும் என்ற வழி எதுவும் கிடையாது. ஆனால் திறமையான ஒருவருக்குக் குறைவான மூலதனமே போதும் என்பது பொதுவான விதியாகும்.

● அமாவாசை, பௌர்ணமி நாட்களில் கடலின் நிலையும், நமது உடலின் நிலையும் மாற்றம் அடைவதால் உடல் நலத்தின் பொருட்டும் கடல் நீராடல் இன்றியமையாதது. கடலில் குளிப்பதால் அநேக உள் வியாதிகளும், வெளிவியாதிகளும் ஒழிகின்றன.

# பொன்மொழிகள்



ஸ்ரீமத் ஸத்குரு
சாந்தானந்த ஸ்வாமிகள்

கடவுளுக்கு சேவை செய்வதே உனது ஸாதனை ஆகிவிட்டது.

அகந்தையுள்ளவனே அசுரனும் கொடிய அரக்கனுமாவான்.

பிறரைப்பற்றி கவலைப்படுபவன் மனம் சாந்தியுறுது.

கடவுளைக் காண நம்பிக்கை ஒன்றே வேண்டும்.

இவ்வுலகில் நீ கண்டு பிடிக்க வேண்டியவன் கடவுள். அவனை வெளியில் தேடாதே. அவன் உன் உயிராய் இருக்கிறுன். அவனைக் காண நீ அவன் திருவடியில் உன் உயிரையும் விடத் தயாராய் இரு.

நீ ஒரு ஜீவனுகிய உப்புப் பொம்மையாவாய். கடவுளாகிய கடலில் நீ கலந்து விடுவாயானுல் பிரம்மானந்த மயமாகி விடுவாய், மறவாதே.

தன்னை அறியாதவனுக்குத் துயரம் நீங்காது.

பகுத்தறிவு இருந்தும் புலன்களை அடக்க முடியாதவன் மிகப் பெரிய நடமாடும் மனித மிருகம் ஆவன் என்பதை நீ மறந்து விடாதே.

துணிவுடன் சரணமடைந்து விடு. கவலையற்றுப் போகும்.

மனம் எதை நினைக்கிறதோ அதன் மயமாகிவிடும். மனமே! நீ கடவுளையே நினைத்து நினைத்து கடவுளாகவே மாறிவிடு.

பிறர் என்று உனக்கு நினைவு வரும்போதெல்லாம் உனக்குள்ளிருக்கும் கடவுளே பிறருக்குள்ளும் இருப்பதாகக் கண்டுவா, மறவாதே.

அனைத்தும் இறைவன் செயல் என்று நம்பிவிடு. கவலையற்றுப் போகும்.

மனிதன் காற்றை விரும்புவது போல் நீ த்யானத்தையே விரும்புவாயாகுக.

உனக்குக் கடவுள் கண்ணைக் கொடுத்துள்ளது. தன்னைக் கண்டு கொள்ளவே தான் என்பதை நீ மறந்து விடாதே. நல்ல அறிவாகிய கண்ணைக்கொண்டு உன்னை நீ கண்டு கொள்வாயானால் அதுவே கடவுளுக்கு நீ செய்யும் கைமாறாகும். மறவாதே.

உனக்கு முன்னுள்ளவைகள் அனைத்தையும் கடவுளாகவே நீ கண்டுவா. மறவாதே.

வீண் பெருமை அருளைப் போக்கிவிடும்.

அனைத்தையும் தியாகம் செய்தவனுக்கே பக்தி யோகம் ஸித்தியாகும்.

உலகில் இருப்பது அனைத்தும் சக்தியின் அருளால்தான்.

சக்தியில்லை என்று சொல்லும் மனிதனுள்ளும் சக்தியில்லை என்று சொல்லவைப்பதே சக்தியாகும் என்பதை மறவாதே.

ஆத்ம சக்தியில்லாதவனை உலகில் காண முடியாது.

ஆனந்தம் வேண்டுமானால் உன்னையே நீ நான் யார் என்று விசாரம் செய்து வா. துன்பம் துலைந்து இன்பப் பெருக்கெடுக்கும்.

சங்கல்பம் செய்யாதே. சங்கல்பம் நல்ல அறிவைக் கெடுத்து விடும்.

உன் உடலில் உயிர்க்கும் உயிராகிய இறைவன் மறைந்திருப்பதனால் தான் உனக்கு இவ்வுலகில் மதிப்புண்டாகி வருவதை நீ மறந்து விடாதே.

ஆசையுள்ளவன் பலகோடிப் பிறப்பெடுக்கினும் நேர்மையாக இருக்க முடியாது ஞாபகத்தில் வைத்துக்கொள்.

தனக்குத் தானே நன்மை செய்து கொள்ளத் தெரியாதவன் பிறருக்கு நன்மைகளை எப்படிச் செய்யமுடியும்.

பிறருடைய கூட்டுறவினால் துன்பமே உண்டாகும். உனது ஆத்மாவின் கூட்டுறவால் நீ ப்ரம்மானந்த மயமாகிவிடுவாய் என்பதை மறந்து விடாதே.

இம்மையில் தன்னைத்தான் அறிந்துகொள்வதுவே பகுத்தறிவுள்ள மனிதனின் உச்ச நிலையாகும்.

உலகமெங்கும் தேடினாலும் காணமுடியாதது உனக்குள்ளேயே இருக்கும்போது நீ ஏன் கவலைப் படுகிறாய்.

உன்னுடைய நல்ல எண்ணம் உலகையே ஸ்வர்க்கமாக்கிவிடும், மறவாதே.

# புத்தரின் பொன்மொழிகள்

தனது அகங்காரத்தின் இயல்பை உணர்ந்து, தன் புலன்கள் வேலை செய்யும் வகையையும் அறிபவன், 'நான்' என்பதற்கு இருக்க இடமில்லாமையைக் காண்பான்; அதனுல் முடிவற்ற சாந்தியை எய்துவான். உலகம் 'நான்' எனும் நினைவைப்பற்றி நிற்கின்றது; அதனின்றும் கிளம்புவது பொய்யறிவு.

'நான்' என்பது இறந்த பின் நிலைப்பது என்பர் சிலர், மாய்வது என்பர் வேறு சிலர். இருவரும் பிழைபடுபவரே. அவர்களது பிழை மிகப்பெருந் தீங்கினை விளைப்பதாகும்.

பிழையாவது எவ்வாறெனின்: 'நான்' அழியும் தகையது எனின், அவர்கள் பெற முயலும் பயன்களும் அழிவனவாம்; யாதோ ஒரு காலத்துப் பிற்றைநாள் என்பது இல்லாது போகும். பாவஞ் செறிந்த தன்னயத்தினின்றும் இவ்வாறு உய்தல் சிறப்பற்றது.

இதற்கு மாருகச் சிலர், 'யான்' என்பது அழியாது என்பரேல், அப்போது, பிறப்பிறப்புகள் எல்லாவற்றிங்கும் நடுவே பிறப்பற்றதும் இறப்பற்றதும் ஆன பொருள் ஒன்றே உள்ளது என்பதாகும். அவர்களது 'நான்' அத்தகையதாயின், அது பூரணமுடையதாகும். கருமங்களாற் பூரணமடையப் பெறுதல் இயலாது. நிலையான அழிவற்ற 'நான்' ஒரு நாளும் மாற்றமடையாததாம். 'நான்' என்பது பிரபுவாயும் எஜமானனுயும் இருக்கும். பூரணத்தைப் பூரணமாக்குவது அப்போது பயனற்றதாகும்; அந் நோக்கங்களும் முத்தியடைதலும் அவசியமற்றனவாம்.

ஆனுல் இப்போதோ இன்பதுன்பங்களின் குறிகளை நாம் காண்கிருேம். இம்மியேனும் மாருத் தன்மை எங்குள்ளது? நமது கருமங்களை இயற்றுவது 'நான்' என்பதன்று எனின், அப்போது 'நான்' இல்லை என்பதாம்; செயலுக்குப் பின் செய்வோனும், அறிவுக்குப் பின் அறிவோனும், வாழ்வுக்குப் பின் வாழ்வோனும் இல்லை என்பதாகும்.

இப்போது கவனி, கூர்ந்து கேள். புலன்கள் பொருளைச் சந்திக்கின்றன. இவ்விரண்டின் சேர்க்கையினின்றும் உணர்ச்சி பிறக்கின்றது. அதனின்றும் நினைவு விளைகின்றது. ஒரு குவிவில்லை வழியாகச் செல்லும் சூரியனது சக்தி தீயைத் தோன்றச் செய்வதுபோல், புலனும் பொரு

ளும் கூடுவதனுற் பிறக்கும் அறிவின் வாயிலாக, உன்னுல் 'நான்' என்று அழைக்கப்படும் அப்பிரபு பிறக்கிறுன். குருத்து விதையினின்றும் உதிக்கின்றது: விதை குருத்தாகாது; இரண்டும் ஒரே பொருளல்ல. எனினும் வேறுபட்டவைவாகா! உயிருள்ள வாழ்வின் பிறப்பு இத்தகையதே

தான் என்பதற்கு அடிமையாகி, தனக்கெனச் செய்யும் பணியில் காலை முதல் இரவுவரை உழைப்போராய், பிறப்பு முதுமை பிணி சாவு என்பவற்றை ஓயாது அஞ்சி வாழ்வோரே நீங்கள். உங்களது கொடுங்கோன் மன்னன் இருப்பதில்லை என்ற நற்செய்தியைப் பெற்றுக்கொள்ளுங்கள்.

'நான்' என்பது ஒரு பிழை, ஒரு மித்தையறிவு, ஒரு கனவு. கண்களைத் திறவுங்கள், விழியுங்கள். உள்ளதை உள்ளவாறு காணுங்கள், நீங்கள் ஆறுதல் அடைவீர்கள்.

விழித்திருப்பவன் அதன்பின் பயங்கரமான கனவுகட்கு அஞ்சமாட்டான். பாம்பெனத் தோற்றம் அளித்த பழுதையின் இயல்பை உணர்ந்தவன் நடுங்க மெய்தான்.

'நான்' என்பது இல்லையென்பதைக் கண்டறிந்தவன் அகங்காரத்தால் விளையும் காமங்கள் விருப்பங்கள் அனைத்தையும் ஒழித்துவிடுவான்.

பண்டைய பிறவிகளினின்றும் வந்துள்ளவான, பொருள்களின் மீதுள்ள பற்றும், பேராசையும், விஷய இச்சையுமே உலகிற் காணும் துயருக்கும் வீண் பெருமைக்கும் காரணங்களாம்.

இறுகப்பற்றும் உனது தன்னலத்தின் இயல்பை விட்டுவிடு; பூரண அமைதியையும், நன்மையையும், ஞானத்தையும் தரும் பாவமற்ற சாந்தமன நிலையைப் பெறுவாய்.

தனது அருமையைத் தான் உணரின், தன்னைத்தான் நன்கு பாதுகாத்துக்கொள்ள வேண்டும். ஜாமங்கள் மூன்றினுள் ஒன்றிலே ஞானி விழித்திருக்க வேண்டும்.



உள்ளுறப் பிரார்த்தனை செய்வதால் இந்த இரண்டில் ஏதாவது ஒரு பலன் ஏற்படுகிறது. ஒன்று, நாம் எந்தக் கஷ்டம் வரப்போகிறதென்று அஞ்சுகிறுேமோ அது நீங்கி விடுகிறது. அல்லது, அது வரும்போது அதைச் சமாளிக்கும் சக்தி நமக்கு ஏற்படுகிறது.

—ஹாரி எமர்ஸன் போஸ்டிக்

# ஸ்ரீ சிந்தாமணி விநாயகர் வர்தந்தி வைபவம்

### வர்தந்தி அஷ்டோத்ர சத 108 சங்காபிஷேகம்

சென்ற ஆண்டு ஆனித் திங்கள் 19-ம் தேதி (2-7-72) சஷ்டி சதய நட்சத்திரம் கூடிய சுபதினத்தில் ஆழ்வார்திருநகரில் ஸ்ரீசிந்தாமணி விநாயகப் பெருமானுக்கு பாலாலயம்கட்டுவித்து பாலாலய மூர்த்தியாக ஸ்தாபித்து வழிபட்டு வருவது யாவரும் அறிந்ததே. இந்த ஓர் ஆண்டு காலத்தில் பாலாலய விநாயகப் பெருமானை வழிபட்டு வந்தவர்களுக்கு வேண்டிய நற்காரியங்கள் எல்லாம் கைகூடி எல்லா நலன்களும் பெற்றனர்.

இந்த ஓர் ஆண்டு காலத்தில் எண்ணற்ற அபிஷேகங்களும் உபந்யாஸங்களும் முறைப்படியான தனுர்மாத உஷக்கால பூஜையும் நடத்தி வைக்கப் பட்டன.

நாளது பிரமாதீச வருடம் ஆனி மாதம் 8-ந் தேதி 22-6-73 வெள்ளிக் கிழமை வளர் பிறை ஷஷ்டி திதி சதய நட்சத்திரம் சித்தயோகம் கூடிய சுபதினத்தில் வர்தன்,தி (பாலாலய நினைவு நாள்) சுப தினம் வருவதால் அன்று பாலாலய ஸ்ரீ சிந்தாமணி விநாயகருக்கு காலை 6½ மணிக்கு மேல் 8 மணிக்குள்ளாக மிதுன லக்கினத்தில் அஷ்டோத்திர சத 108 சங்காபிஷேகம் ஸ்ரீ லஸ்ரீ பன்றிமலை சுவாமிகள், அங்கையற்கண் அம்மையின் அரிய பக்தரான ஸ்ரீ பி டி. ராஜன் அவர்கள். முன்னிலையில் நடத்த நிச்சயிக்கப் பட்டுள்ளது.

21-6-73 வியாழன் இரவு 7 மணிக்கு யாகசாலை ஆரம்பித்து தொடர்ந்து 3 நாட்களுக்கு காலக்ஷேப நிகழ்ச்சிகள் நடத்தவும் உத்தேசிக்கப் பட்டுள்ளது. மேற்படி நிகழ்ச்சிகளுக்கு அன்பர்கள் அனைவரும் கலந்து கொண்டு தங்களால் இயன்ற பொருளுதவி செய்து ஸ்ரீ சிந்தாமணி விநாயகப் பெருமானின அருள் அடைய கேட்டுக் கொள்ளப் படுகிறார்கள்.

21-6-73 வியாழன் அன்று ஸ்ரீ கொத்தமங்கலம் சுப்புவின் காலக்ஷேபமும் 23-6-73 சனிக்கிழமை இரவு அகில இந்திய ரேடியோ புகழ் கே. ஸி. தியாகராஜன் காலக்ஷேபமும் நடைபெற ஏற்பாடுகள் செய்யப் படுகின்றன.

22-6-73 அன்று ஆழ்வார் திருநகர் ஸ்ரீ சிந்தாமணி ஆஸ்திக சமாஜம் துவக்க விழாவும் அறக்கட்டளை துவக்க விழாவும் நடைபெறும். இந்த விழாக்களில் அறநிலைய ஆணையர் திரு. கே. எஸ். நரசிம்மன் சென்னை உயர்நீதி மன்ற நீதிபதி திரு. N. கிருஷ்ணசாமி ரெட்டியார் முன்னாள் அறநிலைய ஆணையர் திரு. M S. சாரங்கபாணி முதலியார், திரு. C. R. பட்டாபிராமன் மற்றும் பல சமய காவலர்கள் கலந்து கொள்ள ஏற்பாடுகள் நடைபெற்று வருகின்றன.

# அறக் கட்டளைகள் துவக்கம்

ஆழ்வார் திருநகர் ஸ்ரீ சிந்தாமணி விநாயகப் பெருமானின் நித்திய பூஜைகள், மற்ற வைபவங்கள் மிகச் சிறப்பாக நடைபெற்று வருகின்றன.

இந்த பூஜைகள், மற்ற வைபவங்களில் எல்லாரும் பங்கு கொண்டு ஸ்ரீ சிந்தாமணி விநாயகரது திருவருளைப் பெறுவதற்கு வசதியாக வாய்ப்பளிக்கும் பொருட்டு புதியதொரு அமைப்பை ஏற்படுத்த் முடிவு செய்துள்ளனர்.

இந்தக் கோவிலுக்கு அன்றாடத் தேவையான பூஜை, மற்ற காரியங்களுக்கான அறக்கட்டளைகளை அமைக்க உத்தேசிக்கப்பட்டுள்ளது. இந்த அறக்கட்டளைகளில் கற்பூரக் கட்டளை, புஷ்பக் கட்டளை, எண்ணெய் கட்டளை, நைவேத்தியக் கட்டளை இவைகளைப் போன்று இன்னும் பிற கட்டளைகள் துவக்கப்பட இருக்கிறது.

இந்தக் கட்டளைகள் இக் கோயிலுக்குத் தேவையான கைங்கர்யங்களுக்கு ஒரு மாதத்திற்குத் தேவையான உத்தேச மதிப்பை அடிப்படையாகக் கொண்டு குறைந்த பட்சம் ஒரு வருடத்திற்கான தொகையை மூலதனமாகக் கொண்டு ஆரம்பிக்கப்படும். இந்தக் கட்டளைகளில் ஒருவரோ, ஒருவருக்கு மேற்பட்டவர்களோ பங்கு கொள்ளலாம்.

இந்தக் கட்டளைகளின் சிறந்த அம்சம் இக் கோயிலின் வளர்ச்சியில் ஒரு ஸ்தாபனம் மட்டும் பங்கு கொள்ளாமல் ஆஸ்திக அன்பர்கள் அனைவரும் கலந்து கொண்டு கோயிலின் தேவைகளை அனைவரும் மனமுவந்து செய்ய உதவுகிறது. நல்ல காரியங்களில் எல்லாரும் ஈடுபட இந்தக் கட்டளைகள் பயன்படும். கட்டளைகளில் கலந்து கொள்வோருடைய மனம் அமைதியும், உற்சாகமும் பெறுகிறது. தெய்வத்திற்குச் செய்கிறோம் என்று எண்ணும் போதே அதன் பலன் பன்மடங்கு நமக்குக் கிடைக்கிறது. இந்தக் கட்டளைகளில் நாம் பங்கு கொள்வதன் மூலம் நம் குடும்பம் முழுவதும் க்ஷேமம் அடைகிறது. நம் இளந்தலைமுறைகளுக்கும் நல்லதொரு படிப்பினையையும், பண்பையும், பயனையும் அளிக்கிறது.

இந்த அறக்கட்டளைகள் 22-6-73 அன்று துவங்கப்பட இருக்கிறது. இந்த அறக் கட்டளைகளில் ஆஸ்திகப் பெருமக்கள் அனைவரும் தங்கள் சக்திக்கு ஏற்ப கலந்து கொண்டு ஸ்ரீ சிந்தாமணி விநாயகர் பெருமானின் திருவருளுக்குப் பாத்திரர் ஆகும்படி கேட்டுக் கொள்ளப் படுகிறார்கள்.



# பக்தியில் நம்பிக்கை

ஸ்ரீமதி சுசிலா சுந்தரவேலு

'உலகெலாம் உணர்ந்து ஓதற் கறியவன், நிலவுலாவிய நீர்மலி வேணியன் அழகிற் சோதியன் அம்பலத்தாடுவான் மலர்சிலம் படி வாழ்த்தி வணங்குவாம்'

என்ற சேக்கிழார் பெருமானின் பாடலில் 'உலகெலாம் உணர்ந்து ஓதற் கறியவன்' என்றூர், உலகெ லாம், என்ற ஒரே வார்த்தையில், தெளிவாக பூவுலகில் உண்டாகி உயிர் வாழ்ந்திருக்கும். 'புல்லாகிப் பூடாய்ப் புழுவாய் மரமாகிப் பல்விருகமாகிப் பறவையாய்ப் பாம்பாகிக் கல்லாய், மனிதராய் பேயாய் கணங்களாய், வல் அசுர ராகி முனிவராய்த் தேவராய் செல்லா அநின்ற இத்தாவர சங்கமத்துள், என்ற சிவபுராணப் பாடலில் கண்டுள்ளபடி எல்லா உயிர்கள், எல்லாப் பொருள்கள் யாவையும் 'உலகெலாம், உணர் ந்து, என்று அழகாய்க் கூறியுள் ளார். அவரவர்உள்ளத்துள்உணர் ந்து அறிவதே மெய்யான பக்தி யாம். அறிந்த பின்அவனிடம் நம் மை அடைக்கலமாகத் தந்து 'நன் றே செய்யினும் தீதே செய்யினும் நீயே யெனக்கு' என்று எல்லா மாய் அவனையே நம்பி நிற்பது உயர்ந்தோர் பக்தி நிலையாம்.

அழகில் சோதியனை அவனை உள்ளத்துள் உணர்ந்து அவனையே முழுமையாக நம்பி, இவனே என்னைக் காப்பவன், நலத்திலும், கேட்டிலும், என்னைக் கைவிடா நிற்பவன, என் உயிரினுள் ஆன் மாவாக இருப்பவன், என்று அவன்மேல் ஒரு குழந்தை தன் தாயின் மேல் வைக்கும் உண்மை யான நம்பிக்கை வைத்து, உறுதி யுடனிருப்பவர்களுக்கு அவன் தோன்றாத் துணையாவான் என்ப தில் எள்ளளவும் சந்தேகமில்லை. பெற்ற தாயினும் சாலப்பரிந்து, நம்மை, நமக்கு ஏற்படும் துன் பங்களை, துயர்களை, உடனுக் குடன் போக்கி நமக்கு அருகி ருந்து, உடனிருந்து துணைபுரி வான்.

இதையே திரு மாணிக்க வாச கப் பெருந்தகையும் தன் தேனி னும் இனிய 'திருவாசகம், என்ற தெவிட்டாத அமுத ஊற்றினுள் 'அடைக்கலப்பத்து' என்னும் தொகுப்பில் வெகுநயமாகவும் திடமான நம்பிக்கையுடனும் அழ காகப் பாடியுள்ளார்.

'வெறுப்பனவே செய்யுமென் சிறுமையை நின் பெருமையினல்

பொறுப்பவனே யராப்பூண்ப வனே பொங்கு கங்கைச் சடைச் செறுப்பவனே நின்திருவருளா லென் பிறவியை வேர் அறுப்ப வனே யுடையாய் அடியேனுன் அடைக்கலமே.

நம்பிக்கை என்பது இறைவன் பால் நாம் வைக்கும் அன்புத் தொடர்பேயாம். நாம் நமக்கு பெரும் துன்பங்களையும், துயர் களையும், கஷ்டங்களையும துடைக் கும் வழியறியோம். அவைகள் வருவதையும் தடுத்து நிறுத்தும் சக்தியும், பாங்கும் அறியோம்.

அப்படியிருக்க நாம் எப்படி இவ்வுலகினில் நிம்மதியாக, கவலை யிலலாமல், மகிழ்ச்சியாக வாழும் வகை ஏது?. நம் உள்ளமோ கடவுள் நாட்டம் என்ற ஒளியே இல்லாமல் இருண்டு கிடக்கிறது. நமக்கு கொடுக்கப்பட்ட சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம் என்ற ஐம்புலன்களுமோ கடிவாளமும் கண் மறைப்பும் இல்லாக் குதிரை போலத் தறிகெட்டு நம்மை தன் போக்கில் இழுத்துச் செல்லுகின் றன.

ஒரு நாள் இல்லாவிட்டாலும் ஒருநாள் இக்குதிரை நம்மைக் கீழே தள்ளினதும் அல்லாமல் குழியும் பறித்து விடும். அதனால் நாம் பெறுதற்கரிய மானுடப் பிறப்பின் பயனை அடையாது மீண்டும் மீண்டும் இப்பிறவிப் பெருங்கடலில் சிக்கி திண்டாடித் தவித்து உழல வேண்டியதுதான். இதற்கொரு வழியே யில்லையா எனில் இருக்கிறது. கடவுள் நாட்டம் என்ற ஒளியே இன்றி இருண்டு கிடக்கும் நம் உள்ளத் துள், இறைவன்பால் அன்பு என்ற ஒளிவிளக்கை ஏற்றிவைத்து விட்டோமானால் வெளிச்சத்துக்கு முன்னால் இருளுக்கு என்னவேலை?

இருண்டு கிடக்கும் அறையி னுள் ஒளி சிந்தும் விளக்கை ஏற்றி வைத்துவிட்டோமானால் இருள் சொல்லாமல் கொள்ளாமல் ஓடி ஒளிகிறது வெளிச்சத்தின் துணை கொண்டு அறையினுள் மண்டிக் கிடக்கும் தூசு, தும்புகளையும், ஒட்டைகளையும் சுத்தமாக அடித்து துப்புறவு செய்யும் வேலை நமக்கு எளிதாகிறது வெளிச்ச மாக உள்ள வீட்டினுள்ளேயும், வெளியிலிருந்த வருடம் திருடர் களுக்கும் வேலையில்லை. வெளிச்சத் தில் திருடுவது சாக்தியமா குமோ?

நாம் செய்ய வேண்டியது உள் ளத்துள் கடவுள் நம்பிக்கை, பக்தி, என்ற விளக்கை ஏற்று வதேயாகும். அதன் பின் இருளில் கண்ணுக்குத் தெரியாமல் தறி கெட்டு ஓடிக்கொண்டிருந்த ஐம் புலன்கள் என்னும் குதிரையை யும் நாமே பிடித்து அதற்கு நல் லொழுக்கம் என்ற கடிவாளம் பூட்டி, இறையன்பு என்ற கண் மறைப்பும் போட்டுவிட்டோமா னால் அது நேர்பாதையிலேயே நம்மை ஆண்டவனிடம் கொண்டு சென்றுவிடும்.

இவ்வுடல் அழியும் தன்மையது. இன்று அழியுமோ அல்லது நாளை

அழியுமா என்று யாருக்கும் தெரியாது இறைவன் ஒருவனைத்தவிர. ஆனால் ஆன்மா நித்தியமானது, அழிவற்றது. கீதையில் பகவான் அர்ச்சுனனுக்குப் பகர்ந்ததுபோல் “நைநம் சிந்தந்தி சஸ்த்ராணி, நைநம் தகதி பாவக:! நசைனம் க்லேதயந்யாபோ ந சோஷயதி மாருத:!!

(சாங்கியயோகம் 23)

(இதன் கருத்து) “ஆயுதங்கள் ஆத்மாவை வெட்ட மாட்டா. தீ அதை எரிக்காது, நீர் நனைக்காது, காற்றும் அதை உலர்த்தாது)

சான்றோர்கள் தன் அனுபவத்தில் உணர்ந்து உபதேசித்தது போல், நாமும் இறைவன்பால், பக்தியைப்பெருக்கிநம்பிக்கையை பெருக்கி அவனையே சார்ந்து நிற்போமானால் நமக்கு வரும் துன்பங்களை நாம் எளிதில் போக்கிக் கொள்ளலாம்.

உலகிற்கெல்லாம் அம்மையும், அப்பனுமாகி யிருந்து உயிர்களைக் காத்து வரும் அவன் கருணையையும், அன்பையும் என்றும் மறவாமல் அவன் திருமலரடிகள் மறவாமல் வணங்குவோமாக.



# ஆழ்வார் திருநகரில்

ஓர் ஆஸ்திக சமாஜம்

தெய்வபக்தியும் சமய நோக்கும் குறைந்து வருகின்ற இந்த நாட்களில் கடவுள் பக்தியையும், சமய உணர்வையும் தூண்டுவதற்கு ஆழ்வார் திருநகர் வாசிகள் ஸ்ரீ சிந்தாமணி ஆஸ்திக சமாஜம் ஒன்றைத் தொடங்குவதற்கான முயற்சிகளில் ஈடுபட்டு வருகின்றனர்.

இச் சமாஜம் மக்களிடையே சமய உணர்வையும், தெய்வ நம்பிக்கையையும், சகோதர மனப்பான்மையையும் உண்டாக்குகின்ற பணியில் ஈடுபடும். குழந்தைகளுக்காக தேவாரப் பாடல்களைப் போதிப்பதும் வேத பாடசாலை போன்ற காரியங்களையும் ஆரம்பித்து குழந்தைப் பருவத்திலேயே இந்து மத தர்மத்தின் விதி முறைகளைப் போதிப்பதற்கான முயற்சிகளை எடுத்துக் கொள்ளும். மேலும் திங்கள் தோறும் காலட்சேபங்கள் பஜனை போன்ற நிகழ்ச்சிகளை ஸ்ரீ சிந்தாமணி விநாயகப் பெருமானின் சன்னதியில் நடத்தி வைக்கும். குறிப்பாகச் சொன்னால் இந்தப் பகுதியை இந்து தர்மத்தின் உண்மையான உணர்வை பிரதிபலிக்கும் ஒரு பகுதியாக ஏற்படுத்தக் கூடிய முயற்சியில் ஈடுபடும்.

இந்த ஆஸ்திக சமாஜத்திற்கு போஷகர்களாக இரண்டு அல்லது மூன்று இந்து சமயப் பாதுகாவலர்களைக் கொண்ட ஒரு அமைப்பு ஏற்படுத்தப்படும்.

இந்த ஆஸ்திக சமாஜத்தில் பெரியவர்களை மட்டும் அல்லாது இளைஞர்களையும், பெண்களையும் அங்கத்தினர்களாகக் கொண்டு இயங்கும். இந்த நல்ல முயற்சியை மேற்கொண்டுள்ள இந்தப் பகுதி இளைஞர் சமுதாயம் தமிழகத்திற்கே ஓர் எடுத்துக் காட்டான முறையில் அமையும்.

பொதுவாக சமய நோக்கும், கடவுள் பக்தியும் பெரியவர்கள் மத்தியில் மட்டும் நின்று நிலை பெறுமல் வளர்ந்து வருகின்ற சமுகாயத்தினர் இந்த நோக்கங்களுக்காக சிரத்தை காட்டுவது பாராட்டுதற்குரிய ஒரு செயல் ஆகும்.

இந்த சமாஜம் ஸ்ரீ சிந்தாமணி விநாயகப் பெருமான் பாலாலய மூர்த்தியாக ஸ்தாபிக்கப்பட்ட ஓராண்டு நினைவு நாளான (வர்தன்தி) 22-6-73 மாலை 6-00 மணிக்கு உயர்நீதி மன்ற நீதிபதி ஸ்ரீ கிருஷ்ணசாமி ரெட்டியார் அவர்களால் தொடங்க உத்தேசிக்கப்பட்டுள்ளது. ஆரம்ப விழாவில் சமயக் காவலர்களும் கலந்து கொள்வர்.

காஞ்சி காமகோடி பீடாதிபதி ஜகத்குரு ஸ்ரீ சங்கராச்சாரிய ஸ்வாமிகள் அநுக்கிரகமும், ஸ்ரீ சிந்தாமணி விநாயகப் பெருமானின் அருளும் இந்து ஆஸ்திக சமாஜத்திற்கு இருப்பதால் இச் சமாஜம் தமிழகத்துக்கே ஒரு வழிகாட்டியாக அமையும் என்பது உறுதி.

# ஞான விருந்து



ஸ்ரீ சுவாமி சிவானந்தா

தானங்கள், யக்ஞங்கள் போன்ற சத்கர்மங்களின் இறுதி இலட்சியம் சித்த சுத்தியைப் பெறுதலே.

அறநெறித் தூய்மை அடிப் படையிருந்தால்தான் குருவின் கிருபைக்குப் பாத்திரமாவாய்.

மனத்தூய்மை அதிகரிக்குமளவு நீ ஆண்டவனை நெருங்குகின்றாய்.

எனவே மேன்மையான தெய்வீக எண்ணங்களின் மூலம் மனத் தூய்மையை வளர்த்துக் கொள்.

நல்ல குணக்கூறை அமைத்துக் கொள்; உனது கீழ்மையான இயல்பையும் மேன்மையானதாக மாற்றிக் கொள். அப் பொழுது நீ சீக்கிரமே ஒரு ஒப் பற்ற துறவியாகி விடுவாய்.

தீச்செயல்களில் நாட்டம் கொள்ளும் மனதை நல்ல முறை யில் பண்படுத்தி அதைத் தெளி வுறுத்துவதேதான் ஆத்மீக சாதக னின் முதல் கடமை. எனவே மேன்மையான எண்ணங்களையே கொள்; நற்செய்கைகளையே செய்.

இதயம் பரிசுத்தமடைந்தால் ஆங்கு அழகு ஒளிரும் அத்தகைய அழகைப் பெற்றவனே உண்மை யான அழகனும் ஆவான்.

ஒருவனுக்கு வெளிப் பரிசுத்தம் இருந்தால் மட்டும் போதாது, உள் சுத்தமும் வேண்டும். உள் சுத்தம் உள்ளவனே யாண்டும் கேட்டை நீக்கி நல்லதையே கிர கிக்கவல்லவன்.

இதய சுத்தியும், விசால இதய மும், மன சாந்தியும் ஏகாக்கிர

சித்தமும் இருக்குமாகில் முக்தி நிலை தானாகவே உன்னை வந்து அடையும்.

இதயசுத்தி மூலமேதான் மரண மிலாப் பெரு வாழ்வு பிறக்கின்றது.

நீவிர பற்றற்ற சேவையின் மூலம் உனது இதயம் பரிசுத்த மடையுமாகில் உன்னில்வேதாந்த தத்துவார்த்தங்கள் ஒளிரும்; புத்தி பிரகாசமடையும் ஐக்கிய பாவம் வலுக்கும்; பாரமார்த்திகப் பெரு நிலையும் பேரானந்தமும் உன்னை வந்து எய்தும்.

யோகம் பரிபூரணமடைவதற்கோ, இறைவனுடன் இரண்டறக் கலப்பதற்கோ, சமாதியில் ஆனந்தானுபவத்தில் திளைத்து இருப்பதற்கோ பிரம்மச் சரியம் இன்றியமையாதது பிரம்மச்சரியமின்றி ஆத்மீகத் துறையில் உயர்ந்த படித்தரங்களை அடைய முடியாது பிரம்மச்சரியம் தவம் அல்லது யோகத்தின் முக்கிய அங்கம்; மோக்ஷமாகிய கட்டிடத்தின் அஸ்திவாரமுமாகும்.

மனிதனை மிகவும் கீழ்மையில் ஆழ்த்துவது காம உணர்ச்சியே. வலிமை மிக்க இவ்வுணர்ச்சியைக் கட்டுப்படுத்துவது மிகவும் கடினம்தான். எனினும் பெரும் முயற்சி கொண்டு ஆன்மீக நெறிகளைக் கையாண்டல் கீழ்மையான உணர்ச்சிகளை மேன்மையானதாக மாற்றி விடலாம்.

தியானத்தில் ஆன்மீக சக்தி வலுக்கின்றது; வீரியமும் ஓஜஸ் சக்தியாக மாறுகின்றது.

பிரம்மசரியப் பயிற்சியில் தேர்ச்சியடைந்தால் ஆண்மையும் ஆற்றலும் பெருகும்; மனமும் ஒருமைப்படும்.

காயத்தால் புணர்ச்சி மகிழ்தலைத் தவிர்ப்பதினால் மட்டும் காம உணர்ச்சியை அடக்கிவிட முடியாது. இத்துடன் ஜபம் - கீர்த்தனம் - தியானம் - சத்சங்கம் - தத்துவ நூல் ஓதல் - ஆகார நியமனங்கள் - ஆத்ம விசாரம் - மேன்மையான தெய்வீக எண்ணங்களைக் கொள்ளல் நித்திய சுத்தனும் அலிங்கனுமான ஆத்மனை அடிக்கடி சிந்தித்தல் விவேக வைராக்கியத்தைக் கொண்டு சாட்சி பாவத்துடன் காம உணர்ச்சி அல்லது காம எண்ணங்களுக்கு அப்பால் நின்று பழகுதல் முதலிய ஆன்மீக நெறிகளையும் கையாள வேண்டும்.

காம உணர்ச்சியும் ஆன்மீக உணர்ச்சியும் ஒன்றிற்கொன்று மாறானவையே. மனம் ஆன்மீக உணர்ச்சிக்கு வசமாகில் அது மேன்மையுறும். அல்லாது காம உணர்ச்சிக்கு உட்பட்டுக் கீழ்மையையே அடையும்.

காமமும் துவேஷமும் சிற்றியல்புகள்; துக்கம் நிறைந்தவைகள்; மனிதனைக் கீழ்மையில் ஆழ்த்துபவைகள். இதற்கு நேர்மாறாக, பரிசுத்தமும் அன்பும் பேரியல்புகள்; பரமாத்மாவின் சொரூபங்

கள். இவையிருக்குமிடத்தில் மரணமிலாப் பெருவாழ்வே உண்டு.

காம ஆசை ஒழிந்தால்தான் ஆத்மீக முன்னேற்றம உண்டு.

காமினியும் காஞ்சனமும் ஆத்ம சாக்ஷாத்காரத்திறகு இரு முக்கிய தடைகளாகும.

முறைமையான - தவறாத - தியானமும் மனத்தூய்மையும் இருக்குமாகில் கெட்ட எண்ணங்களும் காம உணர்ச்சிகளும் கனவிலும் தோன்ற.

நன்னெறிப் பண்பாடும் பிரம்மச்சரிய அனுஷ்டானமும் இன்றி ஆன்மீக வாழ்வு ஒருக்காலும் கிட்டாது. ●



திருமுருக கிருபானந்தவாரியார் அவதரித்த
புண்ணிய பூமி காங்கேயநல்லூரில்
5-3-72 உ இலட்சதீப விழாவில்
பழநி பரிமள விலாஸ்
S. சித்தநாதன் சன்ஸ் S. குருசாமி அவர்களுக்கு
சந்தானந்த விபூதிச்சக்கரவர்த்தி
என்ற பட்டத்தை வெள்ளியினால் பொறித்த கேடயம் கொடுத்தபோது
எடுத்த படம்.

# மணி மொழிகள்



மகாத்மா காந்திஜி

"ஹிந்து மதமானது ஒரு பெரிய மதம். மற்ற மதங்களை யெல்லாம் வெறுக்காத மதம். மற்ற மதங்களைத் தன்னிடத்தில் ஸ்வீகரித்துக் கொள்ளக் கூடிய சக்தி வாய்ந்த மதம்."

"எந்த மதமும் பலாத்காரத்தால் நிலை நிற்காது. பக்தர்களாலேயே நிலைநிற்கும். ஆனால் பக்தர்கள் என்போர் பெயரளவில் பக்தர்களாய் இருந்தால் போதாது"

"எந்த மதமும் தியாகமில்லாமல் வாழ முடியாது. எப்பொழுது ஜனங்கள் அதற்காகப் பிராணத் தியாகம் செய்யச் சித்தமாக இருக்கிறார்களோ அப்பொழுது தான் எந்த மதமும் பலம் அடைய முடியும். அந்தத் தியாகிகள் பிறரைக் கொல்லாமல் தங்கள் உயிரைத் தியாகம் செய்தவர்களாயிருக்க வேண்டும். அதுதான் ஹிந்து மதத்தின் ஆணிவேரும் மற்ற எல்லா மதங்களின் ஆணி வேரும் ஆகும்."

"உண்மையான மதம் உறுதியுடையதாகும் மானத்தைவிட அதிக நெருங்கிய தொடர்புடையதாகும். ஒருமதமானது உண்மையானதாக இருக்கவேண்டுமானால் அது எத்தகைய அடக்கு முறையையும் எதிர்த்து நிற்கக் கூடியதாயிருக்க வேண்டும்."

"நான் கீதையை வணங்குகின்றவன். ஒவ்வொருவரும் அவரவருக்கு ஏற்பட்ட கடமையையே செய்யவேண்டும் என்றும், வேறு வேலை எவ்வளவு கவர்ச்சியுடையதாகத் தோன்றினாலும் அதை நாடலாகாதென்றும் பகவத்கீதை உபதேசிக்கின்றது."

"பேசாமல் இருப்பதே நல்ல காரியங்கள் செய்ததற்குச் சமான மாக இருக்கக் கூடிய சந்தர்ப்பங் கள் உண்டு என்று பகவத் கீதை கூறுகின்றது."

"உடம்பு ஆடைகளின் வீடன்று உண்மையான மதத்தின் வீடே என்று பகவத் கீதை கூறுகின்றது. அத்தகைய வீடாகச் செய்யவேண் டுமானால் கோபம், துரோகம் ஆசை முதலிய ஆறு பெயர்பெற்ற பகைவர்களை இல்லாமல் அகற்றி விட வேண்டும்."

"நன்மை, தீமை, மறுஜென்மம் என்பன ரிஷிகளால் ஏற்படுத்தப் பட்ட உண்மைகளாகும். மறு ஜென்மம் உண்டென்னும் கொள் கையை அறிவினால் அறிந்து கொள்ள முடியும் என்பது என் எண்ணம்."

"கடவுளிடமும், மறு ஜென்மத் திடமும் உறுதியான நம்பிக்கை யில்லாமைக்குக் காரணம் உலக இன்பங்களில் உள்ள பற்றுதான். இந்தப்பற்று உண்டாகிவிட்டால் எந்த மனிதனும் ஈடேறமாட் டான்."

"கடவுள் பெயரால் தேசத்திற் குச் சேவை செய்யும் கடமையை நிறைவேற்றும்பொழுது இறக்க நேர்ந்தால் இறப்பதற்கு வேண் டிய மனோதைரியத்தை ஹிந்துக் கள் பெறவேண்டும் என்று விரும்பு கின்றேன்."

"தனிமனிதன் சமூகத்திற்காக வும், சமூகம் தேசத்திற்காகவும் தேசம் உலகத்திற்காகவும் தியாகம் செய்தால்தான் அதை உண்மையான தியாகம் என்று சொல்லமுடியும். கடலிலிருந்து ஒரு துளி ஜலத்தை வேறாக எடுத்து விட்டால் அது எவ்வித நன்மை யும் செய்ய முடியாமல் போகி றது. ஆனால் அந்த ஜலத் துளி கடலோடு சேர்ந்திருக்குமானால் பெரிய கப்பல்களைத் தாங்கும் கௌரவத்தைக் கடலோடு சேர்ந்து தானும் பெற்று விடு கிறது."

"சொறி சிறங்கால் கஷ்டப்படு கிறவர்களுக்கு உடம்பைச் சொறிந்தால் சுகமாயிருக்கும். அதைக் கொண்டு உடம்பைச் சொறிய வேண்டும் என்ற ஆசை சரியான ஆசை என்று சொல்ல முடியாது. அதுபோலவே தற் காலத்திலுள்ள நாகரிகமானது நம்முடைய சுகானுபவ ஆசை களைப் பூர்த்தி செய்து வைப்ப தைக்கொண்டு அந்த நாகரிகம் விரும்பத்தக்கது என்று கூற முடி யாது."

"இராமன் ராவணனை வெற்றி கொண்ட வைபவம்தான் தசரா என்பது."

"ஞானமானது கீழ்நாட்டிலிருந் துதான் மேல் நாட்டிற்குச் சென் றது. உலகத்தில் உதித்துள்ள பெரிய மதாச்சாரியர்கள் எல்லா ரும் கீழ்நாட்டைச் சேர்ந்தவர் களே"

"தினந்தோறும் கடலுக்குள் ஆறுகள் வந்து பாய்கின்றன

ஆனால் கடல் ஜலம் கரைபுரண்டு ஓடுவதில்லை. கடலில் ஜலமானது கூடுவதுமில்லை; குறைவதுமில்லை. அந்த விதமாக இருப்பான் பரிபூரணஞானி. ஐம்பொறிகள் வழியாக அவனுடைய ஆன்மாவுக்குள் ஆசை வெள்ளங்கள் வந்து பாய்ந்து கொண்டிருக்கும். ஆனால் அவனுடைய ஆன்மாவோ அவைகளுடைய காணிக்கைகளைப் பற்றிக் கொண்ட போதிலும் எப்பொழுதும் ஒன்றுபோல அமைதியாகவே இருக்கும்."

"நான் சிறுவயதிலிருந்தே பசுவிடம் பக்தியுள்ளவன். நான் பசுவைக் காமதேனுவாகவே கருதி வருகிறேன்."

"நான் எப்பொழுதும் பசுவை வணங்குபவன். பசுக்கொலையானது ஹிந்து மதத்துக்கு விரோதமானது."

"பசுவிடம் செலுத்தும் பக்தியில் நான் யாருக்கும் குறைந்தவனல்லன்."

"பிரமசரியம் என்பது பிரம்மம் என்னும் கடவுளிடம் கொண்டு சேர்ப்பதற்குரிய வாழ்க்கை முறையே."



# ஜீவகாருண்யம்

வள்ளலார்

தம் பசியினால் தூக்கம் பிடியாமல் துன்பப்படுகின்ற ஏழை ஜீவர்களுக்கு ஆகாரம் கொடுத்துத் துக்கத்தை நீக்கித் தூக்கம் பிடிக்க வைப்பதே ஜீவகாருண்யம்.

கடவுள் இயற்கை விளக்கத்திற்கு இடமாகிய ஜீவ தேகங்கள் என்கிற ஆலயங்கள் பசியினால் பாழாகும் தருணத்தில் ஆகாரம் கொடுத்து அவ்வாலயங்களை விளக்கம் செய்விப்பதே ஜீவகாருண்யம்.

பசியினால் வரும் துன்பத்தையும் கொலையினால் வரும் துன்பத்தையும் நிவர்த்தி செய்விப்பதே ஜீவ காருண்யத்திற்கு முக்கிய லட்சியம் என்று அறிய வேண்டும். பசி என்கிற நெருப்பானது ஏழைகள் தேகத்தினுள் பற்றி எரிகின்ற போது, ஆகாரத்தால் அணைக்கின்றதுதான் ஜீவகாருண்யம்.

தமது குடும்பச் செலவைக் கூடிய மட்டும் சிக்கனம் செய்து, ஏழைகளின் பசியை நீக்குதல் வேண்டும்.

ஜீவகாருண்யத்தின் முக்கிய லட்சியமாவதெதுவெனில், எந்த வகையாலும் ஆதாரமில்லாத ஏழைகளுக்கு உண்டாகின்ற பசி என்கிற பெரிய ஆபத்தை நிவர்த்தி செய்கின்றதே முக்கிய லட்சியமென்றறிய வேண்டும்.

இறைவா! எனது மனம் மகிழ்ச்சியடையும்படி, என்றும் என் பெயர் அழியாதிருக்கும்படி வரத்தைக் கொடுத்தாய்! என்றும் அழியாமல் நிற்கும்படியான அறிவுடைய காரியங்களைச் செய்யும் ஆற்றலையும் அளித்தாய்! யான் எண்ணிய உண்மை நெறியில் செல்லும்படியான சக்தியை எனக்களித்தாய்! என்னையும் உயர்ந்தவனாக்கினாய்! நான் என்றும் இறவாமல் புகழுடன் வாழும்படியான வரத்தையும் எனக்கு அளித்தாய்! எல்லா மக்களையும் ஒன்றெனக் கருதி, அவர்களையெல்லாம் ஒரே சமுதாயமாகச் செய்யும் ஜீவகாருண்ய மார்க்கத்தை அடைந்தேன். இதனால் எக்காலமும் சாகாமல் மேலும் மேலும் என் பெயர் உலக முழுவதும் பரவும்படியான புகழ் உடம்பைப் பெற்று விட்டேன்!

ஜீவகாருண்ய ஒழுக்கமில்லாமல், ஞானம், யோகம், தவம், விரதம், ஜெபம், தியானம் முதலி

யவைகளைச் செய்கின்றவர்கள், கடவுள் அருளுக்குச் சிறிதும் பாத்திரமாகார்கள். அவர்களை ஆன்ம விளக்கமுள்ளவர்களாகவும் நினைக்கப்படாது. ஜீவகாருண்யம் இல்லாது செய்யப்படுகின்ற செய்கைகளெல்லாம் பிரயோசனமில்லாத மாயா ஜாலச் செய்கைகளேயாகும் என்று அறிய வேண்டும்.

மக்களிடம் உயிர்க் கருணை இல்லாவிட்டால், அவர்களுடைய அறிவு வளர்ச்சியடையாது! அன்பு வளர்ச்சி அடையாது; அவர்கள் ஒன்றுபட்டு வாழமாட்டார்கள்.

செல்வம் உடையவர்கள் அதிகமாக உண்ணுகிறார்கள்; அளவுக்கு மேல் உண்ணுகிறார்கள். வறியவர்கள் மிக்க பசியினால் உடல் வருந்துகிறார்கள்; மனம் வேகின்றார்கள்; நெஞ்சங் கொதிக்கின்றார்கள். இதைப்பற்றி நினைக்கவே என்னால் முடியவில்லை. இதை நினைக்கும் தோறும் யாரையும் இகழ மனம் வரவில்லை. என்மனம் எரிகின்றது. என் உடம்பும் எரிகின்றது. ஐயோ! நான் இக்கொடுமைக்கு என்னதான் செய்வேன்!

ஜீவகாருண்ய ஒழுக்கம் சிறிதும் இல்லாத புலி, சிங்கம் முதலிய மிருகங்கள் வாழுகின்ற காட்டில் இகலோக ஒழுக்கம் வழங்கவே இல்லை. அதுபோல் ஜீவகாருண்ய ஒழுக்கம் இல்லாத மனிதர்கள் வாழும் இடத்திலும் இகலோக ஒழுக்கம் வழங்கவே மாட்டாது என்று அறிய வேண்டும்.

ஜீவகாருண்யம் விளங்கும் போது அறிவும் அன்பும் உடனாக நின்று விளங்கும். ஜீவகாருண்யம் மறையும்போது அறிவும் அன்பும் உடனாக மறையும்.

வறியோர்க்கு உதவி செய்தல் வேண்டும். பசிப்பிணிப் பரம் பரையை மாற்றுதல் வேண்டும். மக்களிடம் பேதம் பாராட்டாமல் எல்லோரும் ஒன்றெனக் கொள்ளல் வேண்டும்.

நம்முடைய தலைவராகிய கடவுளை நாம் அடைவதற்கு அவர் எழுந்தருளியிருக்கும் கோட்டையின் சாவியாகிய அருள் வேண்டும். அவ்வருள் அன்பினால் அல்லாது வேறு வகையாய் அடைவது அரிது. அவ்வன்பு ஜீவகாருண்யத்தால் அல்லாது வேறு வகையாய் வராது. அன்னிய உயிர்களுக்கு இம்சை உண்டாகாமல் நடத்தலே ஜீவ காருண்யம். இதுதான் சித்தி பெறுவதற்கு முதற்படியாக இருக்கின்றது.

ஜீவகாருண்ய ஒழுக்கத்தைக் கடைப்பிடித்து, புலால் உணவை வெறுத்து, தயவுடைய மனத்தினர் எல்லோரும் சன்மார்க்க சங்கத்தில் சேரலாம்.



# கங்கை

சென்ற இதழ் தொடர்ச்சி

பகீரதன் பூலோகத்திற்குக் கொண்டு வந்ததால் கங்கைக்கு 'பாகீரதி' என்று பெயர் ஏற்பட்டது. இதனால் பெரிய காரியங்களைச் சாதிக்க மேற்கொள்ளும் பெருமுயற்சிக்கு 'பகீரதப் பிரத்தனம்' என்ற பெயர் ஏற்பட்டது.

பிரமன் வரம் கொடுத்ததும் வானிலிருந்து விழும் கங்கைப் பெருக்கின் வேகத்தைத் தாங்கச் சிவபெருமான் ஒருவரே ஆற்றலுள்ளவர் என்று அவரைக் குறித்து பகீரதன் தவங்கிடந்து கீழே விழும் கங்கையைத் தாங்கும்படி அவரை வேண்டிக் கொண்டான். இப்படி கங்கையைத் தலையில் தாங்கியதால் சிவபிரானுக்கு 'கங்காதரன்' என்ற பெயர் ஏற்பட்டது.

'சிவன் என்னைத் தாங்குவதா? அவனையும் இழுத்துக்கொண்டு பாதாளம் செல்வேன்' என்று இருமாப்புக்கொண்டு, கங்கை மிகு வேகமாகச் சிவபிரான் தலையில் விழ, அவள் செருக்கை அடக்கச் சிவபிரான் அவளைத் தம் சடையின் ஒரு பகுதியில் அடக்கிக் கொண்டார். பல்லாண்டுகள் கங்கை சிவபிரான் தலையிலே கட்டுண்டு சுழன்று கொண்டிருந்தாள். மறுபடியும் பகீரதன் தவங்கிடந்து சிவபிரானை வேண்ட, அவர் தம் தலையிலிருந்து 7 அருவிகளாகக் கங்கைப் பிரவாகத்தை விடுத்தார். இந்த 7 அருவிகளாவன: கிழக்கு முகமாய் விழுந்தோடியவை மூன்று: ஹ்லாதினி, பாவனி, நளினி. மேற்கே பாய்ந்தவை மூன்று; ஸுசக்ஷுஸ், சீதா, சிந்து. ஏழாவது பகீரதனைப் பின் தொடர்ந்து, தென்புறமாக வந்த கங்கா-பாகீரதி. வரும் வழியில் கட்டிற்கடங்காத கங்காதேவி மறுபடியும் வேள்வி நடத்திக் கொண்டிருந்த ஜன்ஹு முனிவரின் வேள்விக் கூடத்தினுட் பாய, அவர் கங்கையைக் காதில் அடக்கிக் கொண்டார்; பின்னும் பகீரதன் வேண்ட, காது வழியே விட்டார். ஜன்ஹு விட்டதால் கங்கைக்கு 'ஜான்ஹவி' ('ஜன்ஹு மகள்') என்ற பெயர் ஏற்பட்டது. ஜன்ஹு ஆச்சிரமம் சுல்தான் கஞ்சு என்ற இடத்தில் இருகிறது. பாகவதம் 10, 70, 44-ல் உள்ளவாறு வானில் ஓடும் நிலையில் இந்நதி மந்தாகினி என்றும், பூமியில் கங்கை என்றும், பாதாளத்தில் போகவதி என்றும் பெயர் பெற்றது.

பாகவத்திலே திரிவிக்ரமாவதாரத்தில் உலகளந்த பெருமானது வானளாவிய திருவடியைப் பிரமதேவன் தன் கமண்டல நீரால் அலம்பியபோது, பெருகியவளே ஆகாச கங்கை ஆனதுபற்றி கங்கைக்கு 'விஷ்ணுபதி' என்றும் பெயர் வழங்குகிறது. இதே புராணத்தில் மற்றோரிடத்தில் விஷ்ணுலகில் இருந்ததும் பூவுலகிற்கு வந்ததும், பின் வருமாறு சொல்லப்பட்டிருக்கிறது: திரிவிக்கிரமாவதாரத்தில் பெருமானுடைய கால் நகம் குத்திப் பிரமாண்டம் பொத்தலாகிப் போனபோது அதிலிருந்த நீர் ஒழுகித் துருவமண்டலத்தில் விழுந்து, அங்கிருந்து, வானில் வழிந்தோடி, மேருவில் விழுந்து, பிரமலோகம் அடைந்து, அங்கிருந்து சீதா, அளகநந்தா, வவங்க்ஷு, பத்திரா என்று நாற்றிசையிலும் நான்கு அருவிகளாகப் பெருகிக் கடைசியில் கடலை அடைந்தது. இவற்றுள் அளகநந்தையே பரதகண்டத்தினுள் பாய்ந்த ஆறாகும்.

கங்கை கீழே இறங்கியதாகக் கூறப்படும் நாள் வைகாசி, சுக்கில பட்ச, திருதியை செவ்வாய்க் கிழமை, அத்தநட்சத்திரம்.

கங்கை பாயுமிடம் யாவராலும் தூயதாகக் கருதப்பட்டபடியால் கங்கைக் கரையில் பண்டைக் காலங்களில் முனிவர்களின் ஆச்சிரமங்களும் தவமிருக்கும் இடங்களும் இருந்தன. அவை இக்காலத்தில் கங்கைக்கரையில் திருப்பதிகளாகவும், தீர்த்தங்களாகவும் கருதப்படுகின்றன. இதன் கரையில் தங்கிச் சித்த புருஷர்கள் பரம பதத்தை அடைவதாகக் கூறுவதால் இதற்குச் சித்த நதி என்றும் பெயர். இப்படி கங்கையை ஒட்டி ஏற்பட்ட தலங்கள் ஏராளமாயிருப்பினும், அவற்றுள் மிகச் சிறந்தவை கங்கை உற்பத்தியாகும் இடமான கங்கோத்திரியும், கங்கை தென்படும் இடமான கங்காத்துவாரம் என்ற ஹரித்துவாரமும், பிரயாகையும், காசியும் ஆகும். கங்கையில் விழும் ஆறுகள் எல்லாவற்றின் சங்கமங்களையும்விட, கங்கையும் யமுனையும் சேரும் இடமான பிரயாகையை மிகவும் சிறப்பாகக் கொண்டாடுகிறார்கள். இப்படியே கங்கை கடலில் கலக்குமிடமும் புனிதமாக எண்ணப்படுகிறது.

கங்கோத்திரி: இது கர்வால் பிரதேசத்தில் ருத்திர ஹிமாலயம் என்ற பள்ளத்தாக்கில் இருக்கிறது. இப்பள்ளம் முழுதும் நிரம்பிக்கிடக்கும் பனிக்கட்டியிலிருந்து கங்கை உற்பத்தியாகிறது. இங்கே கங்காதேவியின் கோயில் ஒன்று இருக்கிறது.

கங்காத்துவாரம் (ஹரித்துவாரம்): இதற்கு மாயாபுரி என்றும் பெயர். இந்தியாவில் ஏழு முக்கியத் தலங்களுள் ஒன்றாகிய மாயா என்பது இவ்விடமே கங்கை தோன்றும் இடம் என்று காளிதாசன் சொல்லும் கனகலம் என்

பதும் இதன் பக்கமே. ஹரித்துவாரத்திலுள்ள தீர்த்தத்திற்குத் பிரமகுண்டம் என்று பெயர். தட்சன் வேள்வி நடத்தியபோது சதி தன் உடலை நீத்த இடமும் இதுவென்று கூறுவர்.

பிரயாகை: இது கங்கை, யமுனை, கண்ணுக்குப் புலனுகாமல் ஓடுவதாகக் கருதப்படும் சரசுவதி இம்மூன்றும் கூடுமிடம். சரசுவதி பூமியினுள் நுழைந்து மறைந்துபோய்ப் பிரயாகையில் கங்கை யமுனை கூடுமிடத்தில் வந்து வெளிப்படுவதாகக்கூறுவர். மூன்றின் சங்கமமாதலால் இதற்குத் திரிவேணி என்றும் பெயர். இதன் அருகில் அலகாபாத் என்ற நகரம் உள்ளது. இங்கே ஆண்டு தோறும் மாகம் /மாசி/ என்னும் மாதத்தில் மாகமேளம் என்னும் புனிதமான பெரு நீராட்டுவிழா நடைபெறும். 12 ஆண்டுகளுக்கொருமுறை கும்பமேளா என்னும் பெருவிழா நடைபெறுகிறது. இதில் இலட்சக்கணக்கான இந்துக்கள் கலந்து கொள்வர்.

காசி: கங்கையைச் சார்ந்த திருப்பதிகளில் காசியே முதன்மை பெற்றது. மற்றும் இது பாரத நாட்டின் கணக்கற்ற திருப்பதிகளிலும் தலை சிறந்தது. இதற்கு அவிமுக்த, க்ஷேத்திரம், ஆநந்த வனம், பெருமயானம் என்றும் பெயர். இங்கே வந்து வசித்தாலே நற்கதியடையலாம்; இங்கே உடலை நீத்தலே முக்திக்கு வழியாகும்; சிவபிரான் இங்கே தெருத்தெருவாக அலைந்து



கொண்டு, மடியும் மக்கள் காதில் தாரக மந்திரத்தை உபதேசித்துக் கொண்டிருக்கிருர் என்பர்.

கங்கையைப்பற்றிப் புராணக் கதைகள் பல வருகின்றன. அவற்றுள் முக்கியமாகச் சொல்ல வேண்டிய சம்பவம் இரண்டு: கங்கை பீஷ்மரை ஈன்றெடுத்தது; முருகக் கடவுளுக்குத் தாயாக விளங்கியது. இதனுல் இருவருக்கும் காங்கேயர் என்ற பெயர் ஏற்பட்டது.

கங்கையில் நீராடுவது, அதன் கரையிலும் அங்குள்ள திருப்பதிகளிலும் முன்னேர்களுக்கு சிராத்தம் செய்வது, அதன் நீரில் விழுந்து உடலை நீப்பது, தான தருமங்களைச் செய்வது, இப்படி கங்கை சம்பந்தமான ஒழுக்கங்கள் பல கூறப்படுகின்றன. வேதாந்த அறிவு சிறிது மில்லாதாரும் கங்கா—யமுனு சங்கமம் என்ற பிரயாகையில் உடலை விடுவதால் முத்தியடைகிருர்கள் என்று வேதம், புராணம், ஸ்மிருதி முதலியவை கூறும்.

கங்கையின் மான்மியம், கங்கை சம்பந்தமாக நடத்தவேண்டிய அனுஷ்டான முறை, இவை அனைத்தும் தொகுக்கப்பட்டுத் திரிஸ்தலீ சேது, கங்கா வாக்கியாவனி முதலிய தரும நூல்களில் தரப்பட்டிருக்கின்றன. ஸ்காந்த புராணத்தில் காசி கண்டம் முழுதும் காசியை வைத்துக்கொண்டு கங்கையின் மான்மியம் விவரிக்கப் பட்டிருக்கிறது. காசியாத்திரை

விதி, பஞ்சக்குரோச மகாத்மியம் முதலிய நூல்களும் இவற்றையே விளக்குவனமாகும். வைதிக யாத்திரிகர், 'கங்கா, கங்கா' என்று செபித்துக் கொண்டு போவார்கள்; ஒரு சிறு பாத்திரத்தில் கங்கை நீரை அடைத்துக் கொண்டு வந்து வீட்டில் வைத்துப் பூசை செய்வர். கங்கை யாத்திரை இராமேசுவர யாத்திரையோடு பூர்த்தியாவதால் நாள்தோறும் யாத்திரிகர்கள் கொண்டு வரும் கங்கை நீர் இராமேசுவர லிங்கத்திற்கு அபிஷேகமாய்க் கொண்டிருக்கிறது. கங்கை—ராமேசுவர யாத்திரை மூலம் பண்டைக்காலத்தில் நாட்டில் ஒற்றுமை வலுப்பட்டதோடு, அறிவாளிகளும், அவர்கள் எழுதிய நூல்களும் வடக்கிலும் தெற்கிலும பரவ வசதி ஏற்பட்டது.

கங்கை, காயத்திரி, கீதை இம்மூன்று ககாரங்களுக்கு மேலான ககாரம் இல்லை என்று ஒரு சுலோகம் உண்டு. கங்கையை யோகிகள் மாநிலத்தில் வெளியே நீராடும் ஆறாகக் கருதுவதில்லை. அதை ஒவ்வொரு மெய்யினுள்ளும் ஓடும் நாடியாகக் கருதுவர். கங்கை—யமுனை—சரசுவதி என்ற திரிவேணி சங்கமம் இடை, பிங்கலை, சுழுமுனை என்று யோக நூலில் பேசப்படும் யோகப் பயிற்சிக்கு அடிப்படையான மூன்று நாடிகளே என்றும் கருதுவர்.

—கலைக்களஞ்சியம்

# ஆலய, தீர்த்தங்களைப் பாதுகாக்க வேண்டும்

ஆலயம் என்பது கோவில் என்னும் ஈசனின் இருப்பிடமென நம் நாட்டில் கொள்ளப்படும். கோயில் என்னும் சொல் 'கோ', 'இல்', என்ற இரண்டு சொற்களின் சேர்க்கையாகும். 'கோ' என்றால் அரசன்; 'இல்' என்றால் 'வீடு' அல்லது இருப்பிடம் எனப் பொருள் படும். ஆகவே கோவில் என்றால் அரசனின் வீடு எனப்படும்.

சாதாரண நாடாளும் அரசர்களுடைய இருப்பிடம் அரண்மனை எனப்படும். ஸகல அண்ட சராசரங்களையும் படைத்துக் காப்பாற்றி எல்லா உலகங்களுக்கும் அதிபனாக விளங்கும் பரம்பொருளாம் கடவுளுக்கு இருப்பிடம் ஏது? எல்லாம் அவன் இருக்கும் இடம்தான். இது ஞானிகள் அறிந்து கொள்ளக்கூடிய விஷயம். சாதாரண மானிடனுக்குக் கடவுளைத் தியானிக்க ஏற்பட்டவை உருவ வழிபாடுகளும் ஆலயங்களும். சில மகான்களே பரம் பொருளை ஸர்வ வியாபியாகவும் ஸர்வாந்தர்யாமியாகவும் கொள்ள முடியும்.

பெரும் பகுதியான சாதாரண மானிடருக்காகத்தான் ஆலயங்களும் அவற்றின் உற்சவாதிகளும் ஏற்பட்டுள்ளன. ஆலயங்களில் ஸாந்நித்தியக் குறைவு ஏற்பட்டாலும், க்ஷேத்திரம், தீர்த்தம், ஆலய கோபுரம் இவற்றின் புனிதத்துவம் தங்கித்தான் இருக்கும். இப்படிப் பகவானுடைய வாசஸ்தானம் என்று மானிட உள்ளத்தில் தீர்மானிக்கப்பட்டு உள்ள இடங்கள் பரிசுத்தமாக இருக்க வேண்டும்.

இதே போல் புனிதமாகக் கருதப்படும் நதிகளும் தடாகங்களும் சுத்தமாக இருக்க வேண்டும். ஆலயங்களின் சுற்றுப்புறங்களும் தடாகங்களின் சுற்றுப் புறங்களும் சுத்தமாக இருத்தல் வேண்டும்.

தற்காலம் பக்தியுடன் ஆலயத்துக்குச் செல்பவரும், புனித தீர்த்தங்களுக்குச் செல்பவரும் எண்ணில் குறைந்துவருகின்றனர். கோயில்களுக்குச் செல்பவர்கள் முற்காலத்தில் பயபக்தியுடன் செல்வார்கள். இப்போது அந்தப் பண்பாட்டில் குறைவு ஏற்பட்டு வருகிறது. கோயிலுக்கு வெளியிலும் சுற்றுப்புறத்திலும் சிறுநீர் கழிக்கப்படுகிறது.

● நீர்த்தம், குளத்துறை, சிறிய தடாகம் முதலியவற்றில் நீந்துதலும், நீரைக் கலக்குதலும், சாடுதலும், உமிழ்தலும் சோப்பு முதலியவற்றைத் தேய்த்தலும் கூடாது.

● சூடம் எவ்வாறு சாம்பல்கூட இல்லாமல் ஜோதியில் கலந்து விடுகிறதோ, அதுபோல் உயிரும் ஜோதியில் கலக்க வேண்டும் என்பதை உணர்த்தவே கோயிலில் சூடம் கொளுத்துகிறோம்.

● கூர்மையான பார்வையும், சாண்பவற்றைப் பற்றிச் சிந்திக்கக் கூடியவர்களுமே புதிய பொருள் எதையும் கண்டு பிடிக்கும் ஆற்றல் வாய்ந்தவர்கள் ஆவார்கள்.



அதே போல் நதிக்கரைகளிலும் குளங்களைச் சுற்றியும் அசுத்தம் செய்யப்படுகிறது. மிகப் பெரிய கோயில்களில் கோயிலின் உட்புறங்களிலேயே இத்தகைய அசுத்தங்கள் செய்யப்படுகின்றன. வெற்றிலை பாக்கு எச்சிலையும் சாதாரண எச்சிலையும் கோயிலின் உட்புறங்களில் உமிழ்வது சகஜமாக இருந்து வருகிறது. நகரங்களிலுள்ள கோயில்களின் சுவர்களிலும், சரித்திரப் பிரசித்தியும் கலைப் பிரசித்தியும் பெற்ற கோவில்களின் சுவர்களிலும் மாணவர்களும் இளைஞர்களும் செய்துள்ள ஸேவை அதாவது கெட்ட கைங்கரியம் சொல்வதற்கில்லை. கரி கொண்டும், சாக்பீஸ் கொண்டும், பென்சில் கொண்டும் எழுதப்பட்டுள்ள - கிறுக்கப்பட்டு வரும் ஆபாசங்களுக்கு அளவே இல்லை.

நகராட்சி மன்றங்கள் புனிதமான நதிகளில் நகரங்களின் கழிவுகளைக் கடத்துவது மிகவும் வருந்தத்தக்க விஷயம். இவையன்றி, நல்ல குளங்களில் சோப்புப் போட்டுத் துணிகளைச் சுத்தம் செய்வதும், எச்சில் உமிழ்வதும், பாத்திரங்களைத் துலக்குவதும், மலங்கழித்த பின் சுத்தம் செய்து கொள்வதும் எவ்வளவு வெட்கக்கரமான செயல்கள் என்று எண்ணிப் பார்க்க வேண்டும்.

கோயில்கள், தடாகங்கள், நதிகளின் பக்கலில் மலஜலங்களைக் கழிப்பது சுகாதாரத்துக்கு ஏற்றதல்ல. பல மக்கள் கூடுமிடம் சுத்தமாக இருக்க வேண்டும் என்பதை மக்கள் உணர வேண்டும்.

பல ஆலயங்களின் கோபுரங்கள், மதில்சுவர்கள், பிராகாரங்கள், நடக்கும் பாதைகள் முதலிய இடங்களில் புல் பூண்டுகளும் செடி கொடிகளும் முளைத்துப் பெரியவையாகவும் ஆகிவிடுகின்றன. இதனால் அந்த ஆலயக் கட்டிடத்திற்கே கெடுதி ஏற்படக் கூடும். அப்பர் இதற்காகவே உழவாரப் பணி நடத்தி வந்தார். பல பெரியோர்கள் அவ்வழியைப் பின்பற்றி வந்தனர். 'ஆலயம் இல்லாத ஊர் பாழ்' என்றனர் ஆன்றோர். ஆபாசமான ஆலயம் பாழிலும் பாழ் என்றால் மிகையாகாது.

சமீபத்தில் நமது தமிழ் நாட்டில் ஆலயங்கள் பரிசுத்தமாக வைத்துக் கொள்ளப்பட வேண்டுமென்ற நோக்கத்துடன் சில இடங்களில் மாநாடுகள் கூட்டப்பட்டதை அறிந்து மகிழ்ச்சி அடைகிறோம்.

இந்த உத்தமமான நோக்கம் ஈடேற, அரசாங்கமும் கோயில் செல்லும் மக்களும் கோயில் அதிகாரிகளும் யாவரும் சேர்ந்து முயல வேண்டும். முதலில் ஆலயங்களைப் பரிசுத்தமாக வைத்துக் கொள்வதற்காகப் பிரசாரம் செய்ய வேண்டும். ஆலயங்களையும் புனித தீர்த்தங்களையும் அவற்றின் சுற்றுப் புறங்களையும அசுத்தம் செய்தால் அரசாங்க தண்டனை

கிடைக்கும் என்றபயம் மக்களுக்கு ஏற்பட வேண்டும்.

கோயில் அதிகாரிகள் அடிக்கடி கோயிலுக்குள் வரும் மக்களுக்கு எச்சரிக்கை செய்வதுடன் ஆசாசம் செய்யக்கூடாது என்று விளம்பரங்களையும் செய்ய வேண்டும். அசுத்தம் செய்பவர்களைக் கண்டிக்க வேண்டும்.

மாதம் ஒரு முறையாவது கோயில்கள் முழுவதையும் சுத்தம் செய்து, முளைக்கும் புல் பூண்டுகளைக் களைய வேண்டும். இந்தச் சேவையில் மக்களின் பங்குதான் பெரிது. 'அரசனின் வீடாகிய அரண்மனையுள் சென்று அசுத்தம் செய்தால் நம்மைச் சும்மா விடுவார்களா?' என்ற பயம் கோயிலினுள் செல்பவர்களுக்கு ஏற்பட வேண்டும்.

இதற்குத் தகுந்த துண்டுப் பிரசுரங்களை உற்சவ காலங்களிலும், பெரும் கோயில்களில் கூட்டங்களாக மக்கள் வரும் போதும் வழங்குவதுடன் புனித க்ஷேத்திரங்களில் சமயப் பிரசாரம் நடத்துவது போல் இதற்கும் பிரசாரம் செய்ய வேண்டும். பத்திரிகைகளும் இதற்குப் பிரசாரம் செய்ய வேண்டும்.

நன்றி, ஸ்ரீ காமகோடி ப்ரதீபம்

# பாலின் வகைகள்

செந்துறையார்

மனித உயிர்வாழ்விற்குப் பயன் படும்பால் - மனித உடலுக்கு உர மூட்டும் பால் எத்தனை வகைப் படும் என்று தெரிந்து கொள்ள வேண்டியது அவசியமே யாகும்

மனிதன், குழந்தையாகப் பிறந்த பொழுது தாயினிடத்தில் பால் குடிக்கின்ருன்; பிறகு அதை விடுத்துப் பிற பால்களை, அஃதாவது பசும்பால், எருமைப்பால் ஆட்டுப்பால் முதலியவற்றைப் பருகுகின்ருன்; நோய் வரும் பொழுதும் சாதாரண சமயங்களிலும் மரங்களிலிருந்து எடுக்கப்படுகின்ற சில பால்களையும் பருகுகின்ருன். இவற்றைக் கொண்டு பார்க்கும் பொழுது மனிதன் தன் வாழ்க்கையில் பல வகையான பால்களை உட்கொள்ளுகின்ருன் என்பது விளங்கும்.

அப் பலவகையான பால்களையும் மூன்று வகையாகப் பிரிக்கலாம். அவையாவன: மனிதப் பால், விலங்குப்பால், தாவரப் பால் என்பவையாகும்.

1. மனிதப்பால் என்பது ஒரே வகையான பால்தான்: அஃதாவது, மனித இனத்திலிருந்து தோன்றுகின்ற பாலாகிய தாய்ப் பால் என்பதுதான். இந்தத் தாய்ப்பாலைத் தவிர வேறு பால் மனித இனத்தில் தோன்றவில்லை,

2. விலங்குப்பால் என்பது விலங்கு இனத்திலிருந்து எடுக்கப் படுகின்ற பாலாகும். விலங்குப் பால் என்பது பசுப்பால், காராம் பசுப்பால், செந்நிறப் பசுப்பால். வெண்ணிறப்பசுப்பால், எருமைப் பால், வெள்ளாட்டுப்பால், செம் மறியாட்டுப்பால், கழுதைப் பால், குதிரைப்பால், ஒட்டகப் பால், யானைப்பால் என்று பதிஞேறு வகைப்படும்.

இவ்விலங்குகளுக்குப் பால் உண்டாதல் போலவே சிங்கம், மான், நாய், பூனை ஆகிய விலங்குகளிடத்திலும் பால் உண்டு. இவ் விலங்குகளின் பாலை எளிதில் எடுக்க முடிவதில்லை. ஆகையால், இவற்றின் பாலைப் பயன்படுத்துவோரும் இலர்.

3. தாவரப்பால் என்பது தாவர வகைகளிலிருந்து எடுக்கப் படும் பாலாகும். இத்தாவரப் பால் மரப்பால், செடிப்பால், கொடிப்பால் என்று மூன்று வகைப்படும்.

மரப்பால் என்பது தேங்காய்ப் பால், ஆலம்பால், அத்திப்பால், பேயத்திப்பால், பிராயன்பால், புங்கம்பால், கள்ளிப்பால், சதுரக் கள்ளிப் பால், இலைக்கள்ளிப்பால, இரப்பர் மரப்பால் என்று பத்து வகைப்படும்.

செடிப்பால் என்பது சங்கம் பால், எருக்கம்பால், வெள்ளெருக்கம்பால, காட்டாமணக்கம் பால், சிற்றாமணக்கம்பால், பிரம தண்டிப்பால் என்று ஆறுவகைப் படும்.

கொடிப்பால் என்பதில் கொடிக்கள்ளிப்பால் என்ற ஒரே வகைப் பால்தான் அமைந்து பயன்பட்டு வருகின்றது.

இதுகாறும் கூறிய பால்வகை மொத்தம் இருபத்தொன்பது. இவ்விருபத் தொன்பது வகை யான பால்களும் மனிதனுக்குப் பல்வகையில் பயன்பட்டு நலம் புரிந்து வருகின்றன.

(சிதம்பரம் மணிவாசகர் நூலகம் வெளியிட்ட பாலின் சிறப்பு என்ற புத்தகத்திலிருந்து)




ஆசிரியரும் வெளியிடுபவரும் : T ராமனுஜன், 231, ஆழ்வார் திருநகர் சென்னை-87 அச்சிடுபவர்: தொண்டர். காசி. சீதாராமன், ராமன்ஸ் பிரிண்டிங் பிரஸ், சி. ஐ. டி. நகர், சென்னை 35